

The Chief Minister
declaring open class rooms
of the Veda Vijnana Peetham
at Dharmagiri (Tirumala).



The Chief Minister
Planting a Sapling
at Tirumala
on the occasion



ஆக்குமாறு அயனும் முதலாக்கிய உலகம்
காக்குமாறு செங்கணிறை கருணையங் கடலாம்
வீக்குமாறு அரனும் அவைவீந்த நாள்மீளப்
பூக்கும் மாமுதலெவன் அவன் பொன்னடி போற்றி.

—காப்புச் செய்யுள் - வில்லிபாரதம்,

# ஸப்தகிரி

தனிப்பிரதி ரூ. 1 — மலர் 20

வருடச் சந்தா ரூ. 12 — இதழ் 7

## உள்ளுறை

பக்கம்



### அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முன்னட்டை | கீதோபதேசம<br>சித்திரம் கே. ஜெகதீஷ். |
| முதல் உள்அட்டை | திருமலையில் முனனுள ஆந்திர முதல்வர்<br>திரு என். டி ராமராவ அவர்கள் |
| 2-வது உள்அட்டை | ஆநதிர மாநிலம் விஜயவாடாவில் நடை<br>பெறற தேசிய புத்தகக் கண் காட்சியின்<br>போது நிறுவபபட்ட தி.தி.தே சமயநூல்<br>விற்பனை அஙகாடி. |
| பின்னட்டை | கோவிந்தனும கோதையும்<br>சித்திரம் சசி. |

சிறபபாசிரியர்
திரு. சிரச். வெங்கடபதிராஜு
I.A.S,
செயலாட்சித தலைவர்,
தி.தி.தேவஸ்தானம, திருபபதி.

ஆசிரியர்
திரு. கே. சுபபாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸதான அசசகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு.
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

மனிதன் மாண்புற இந்து சமயமதான எவ்வாறெல்லாம் பல வழிமுறைகளையும், அறவுரைகளையும அமைத்து வழங்கியிருககிறது! சிந்திக்கத் தெரிந்த மனிதன் தன் மனதினையும் அறிவினையும் நல்வழிப்படுத்தி, அதன்மூலம் மனித சமுதாயம் உயாவு பெறறிட இந்து சமயம் ஆற்றிடட தொண்டு மகத்தானது. உயிாகளைப் படைத்திட்ட அப்பரம்பொருளே இமமண்ணில தம அடிபணிய பல அவதாரங்கள செய்திடடாா-பல லீலைகளைப புரிந்திட்டார். இவற்றைக் கறபனை என்றும், இவறறைக் கூறுபவன் முட்டாள் என்றும் இன்று பகுத்தறிவு பாசறை பல மேதைகள் கூறுகின்றனர். ஐந்து தலை முறை முன் சென்ற தம பரம்பரையினரின ஒருவரின் பெயரைக்கூட சானறுடன சொலல முடியாத ஒருவர் இம்மண்ணில் முதல் உயிரைப படைத்திட்ட அப்பரமனையா உண்மையென்று ஏற்றுக்கொள்வார்? ஆனமநெறி உணர்வும, இறைப்பகதி யும மனிதனின சுய அனுபவமாகும. அவ்அனுபவத்திறகு இட்டுச் செல்வதே சமயங்கள் கூறும நல்லுபதேசங்கள். இச் சமயங்களுள இந்து சமயம தனக்கென, அதே தருணத்து மற்றைய சமயங்களைவிட-ஒர் உயர்வான சமயவழிமுறைகளையும், விளக்க முறைகளையும் கொண்டுள்ளது.

இந்து சமயததின் புகழக்கொடி பறப்பது ஒருவரால, ஒரு வழிபாடு முறையால மட்டுமே அல்ல. அதன் பெருமை பேசபபடுவது அது பல தததுவக் கோட்பாடுகளையும், பல ஞானியர்களையும பல சமயப் பெரியோர்களையும் கொண்டு விளஙகுவதால்தான, ஒருருககு இட்டுச் செலலும பல வழிப்பாதைகளாகவே, அமமூல பரம் பொருளினபெருமை பேசும இந்து சமயக் கோட்பாடுகள விளங்குகின்றன. இவற்றின பெருமையினையும், சிறப்பினையும் இமமண்ணில் அவ்வக் காலதது வாழ்நது போந்த பல சமய ஞானியர்களால் பரபபப்பட்டு வந்துள்ளன. இவவகையில சமரஸ பிரம்ம ஞானத்தை உபதேசித்த முதல அவதூதராக விளங்குபவர் ஸ்ரீதத்தாத்ரேயர் ஆவாா.

ஞான உபதேசததிறகாக, ஸ்ரீவித்யா பூஜா முறையை இம்மாநிலம் அறிந்து உய்வு பெற்றிட அம்மாயவன் புரிந்திட்ட அவதாரமே ஸ்ரீதத்தாதரேயராவார். இறைவனைக் காண வழிவகுக்கும் வகையில் ஞான, பக்தி, வைராக்ய யோக வழிமுறைகளைக காட்டி, கலியுக விமோசனத்திற்காக எடுக்கப்பட்டது இவ்வவதாரமாகும. 'அதர்மத்தை அழித்து தாமததை நிலைநாட்ட இம்மண்ணில் அவதாரம எடுப்பேன்' எனும் தன் கீதை மொழிக்கிணங்க, சிந்தனையிலும் சொல் லிலும அசுரப் பண்புகள பல கொண்டு விளங்கிடும் இக்கலியுகமானிடனைத் திருத்திடவே இவ்வவதாரமாகும். காமம், ஆசை, பொறுமை ஆகியன மனிதனை ஆட்டிப படைப்பதும, வேத நெறிகள் நசிக்கப்படுவதும், அறமும் ஆன்மீகமும கேலிககுரியாவதும கலியுகததின இலக்கணங்களாகும. இவற்றைத் தடுத்து, மனிதனின் உள்ள வளர்சசியின் மேன்மை யினை மனதிறகொண்டே அவிஞஷியாக, ஞான யோக நிதியாக, மங்கள ரூபியாக, உலக குருவாக, விதேஹ முக்தர்களின் தலைவராக, மும்மூர்த்திகளின சமஷடி ரூபமாக ஸ்ரீதத்தாத்ரேயர் இப்பூவுலகின் முதல் அவதூதராக அதரிக்கும அனு சூயாவுககும் பிறநதிட்டார். சாணடிலய, தத்த, அவதூத, நாரத, பரிவ்ராஜக உபநிஷத்துக்களால் போற்றப்படும் இத் தததாதரேயா ஆனமாவிறகும் பரமானமாவிறகும தூதுவராக விளங்கி, மனிதத்தன்மை, இறை ஈடுபாடு, ஞானியர் உறவு ஆகியவறறிறகு ஓர் இணைபபுப் பாலமாகத் திகழந்து, வேதோபதேசம செய்திட்ட பிரம்மனையும, கீதோபதேசம் தந்த பரந் தாமனையும், ஞானமௌனோபதேசம வழஙகிட்ட பரமசிவனையும் தன்னுட் கொண்டு ஏக தத்துவ நாயகனாக ஸ்ரீதத்தாத் ரேயர் விளங்குகிறாா.

மொழி, இட, இன சமய ஆகிய பிரிவுகளைக கடநது மனிதன, தனனுடைய ஆனம மேன்மையினை, ஞானத் திறனை வளப்படுததிக கொளளும் வகையில சொல்லில சததியத்தையும், செயலில் தர்மத்தையும கடைபிடிக்க வேண்டிய அவசியததை வலியுறுததுமமுகததான் ''பிரமமவித் பிரமமைவ பவதி'' எனும் தைததிரிய வாக்குபபடி பிரம்ம நிஷ்டராக இவவவதார புருஷன திகழகினறாா. ஆககல, அளித்தல அழித்தல் எனும முத்தொழில்கள- ரஜஸ், சத்துவ தமஸ எனும முககுணங்கள-இசசா, க்ரியா, ஞானம எனும முசசக்திகள-ஜாகரத, ஸவபனம், ஸுஷுப்தி எனும் மூனறு நிலைகள ஆகியவற்றைக் கடநது நிறகும அமமூல பரமபொருளின் மொதத உருவமாக விளங்கிடும ஸ்ரீதததாத்ரேயர், மனிதப பிறவியின மாண்பினை உயாத்திக காட்டிடும வகையில தனனுடைய சமய இலககியப் படைப்புகளினமூலம் ஆன்ம நெறி வழிவகைகளை வகுததுத் தெளிவுறுததியுளளாா.

சமயச சான்றோர்களின அறவுரைகளை நடைமுறையில கடைபபிடிக்க வேண்டும எனபதையும, ஆதம சுத்தியே மெய்ஞானத்திற்கு வழிவகுககும எனபதையும, விழிபபு, கனவு உறக்கம ஆகிய நிலைகளிலும இறை உணாவை அகலுதல் கூடாது எனபதையும, மனம வாககு, காயததால மனிதன தூய்மையாக இருத்தலின அவசியததையும் உலகப்பறறை விடுத்து காமத்தையும் அதனைவிட கொடியதான குரோதத்தையும கைவிடுதலின் பெருமையினையும, வாழ்ககை உண்மை களை நேரிடையாகவும, மறைமுகமாகவும கூறிடும இயறகையை நேசித்தலின முககியததுவத்தையும், எதனையும் உணர்ச்சி கொண்டு மேற்கொள்ளாமல அறிவுக் கொணடு அலசுவதே மனிதற்குப் பெருமை எனபதையும சுட்டிககாட்டி, அகச்சமய வளர்ச்சிக்கு சமய ஆசார, அனுஷ்டானங்கள் எவ்வகையில் உதவி புரியும் என்பதையும் தெளிவுறுத்திடும். ஸ்ரீதத்தாத்ரே யரின் ஜெயநதி விழா இம்மாத திருவோணததில் ஆரம்பித்து, திருவாதிரையில் முடிவுறும் எனும்போது, அவர்தம் ஜெயந்தி விழா இந்து சமய ஒருமைபபாட்டிற்கு வழிவகுத்திடும ஒரு பேரியக்கமாகவே விளஙகிடும என்பதில் சிறிதும் ஐயமிலலை.

## செய்திச் சுருக்கம்

ராஜஸ்தான் முதலமைச்சர் திரு. சிவசரண்மாத்தூர் அவர்கள் தன் குடும்பத்தாருடன திருமலைக்கு அண்மையில் வருகை புரிந்தார்.

வருடம் ஒரு முறை திருமலைக் கோயிலில் நடைபெறும் புஷ்பயாகம் எனும் ஆஜித சேவையில் தலா ரூ. 3500/- செலுத்தி 75 கிருஹஸ்தா கள் பங்கேற்றனர்.

போகன்வில்லா, க்ஜோரா முதலிய தோட்ட வகைச் செடிகளைக்கொண்டு 165 அடி உயரமுள்ள திருமலையானின் 'நாமம்' ஒன்று திருமலையில், வெகு தூரம் நன்கு புலப்படும வகையில் அமைக்கப்பட உள்ளது.

அண்மையில் திருமலைக் கோயி லுக்கு சென்னை டி. வி. எஸ். தனி யார் நிறுவனத்தார் இரண்டு தள்ளு வண்டிகளை நன்கொடையாக அளித் துள்ளனர். இவ்வண்டிகள் கோயிலுக குள் பிரஸாதக் கூடைகள், சமையற் கங்காளப் பாத்திரங்கள், காணிக்கைச் சில்லரை மூட்டைகள்போன்றவற்றை எடுத்துச் செல்ல பயன்படுத்தப்படும்.

அண்மையில் திருமலைக் கோயில உண்டியலில் பக்தர் ஒருவர் 1000 டாலர் நோட்டுகளை காணிக்கையாகச் செலுத்தியுள்ளார்.

திருமலைக் கோயிலில ஆர்ஜித சேவையாக நாள் தோறும் நடத்தப் படும் உத்சவரின 'கல்யாணோத்சவ' நிகழ்ச்சிகளை உடனுக்குடன் யாத் திரிகப் பொதுமக்கள் கண்டு மகிழ்ந் திடும் வகையில் 'கயூ' கட்டிட வளாகத் தில் ஒளிபரப்பப்படும் என்று தி தி. தே. இணை செயலாட்சித் தலைவர் திரு. என். ரமேஷ் குமார் ஐ.ஏ.எஸ். அவர்கள் கூறினார்.

திருமலையில் எந்தவிதமான அரசி யல் நிகழ்ச்சிகளும் அனுமதிக்கப்பட மாட்டாது என்பதை அண்மையில் தி.தி.தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. கலா வெங்கட்ராவ் அவர்கள் திருமலையில் அறிவித்தார்.

*

## சந்தாதாரர்களுக்கு...

31-1-90—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர் களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித் துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக குறிப் பிடவும். 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி.தே. திருப்பதி எனும் முகவரி யுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

2 12 23 39 66 80 81 129 143 155 205 264 277 426 444 448 463 464 468 481 482 486 488 493 494 623 624 626 628 816 856 878 890 896 935 938 970 978 997 1005 1009 1012 1017 1035 1044 1045 1051 1053 1062 1065 1085 1089 1095 1102 1119 1127 1134 1138 2268 2336 2353 2376 2387 2391 2391 2419 2426 2433 2437 2450 2453 2457 முதல் 2160 2467 2469 2482 2485 முதல் 2492 2494 2197 2498 2500 2502 2503 2512 2513 2516 2533 2537 2538 2545 2555 முதல் 2557 2562 2574 2676 2854 2992 3248 3659 3660 3667 3668 3670 3672 3673 3674 3675 3677 3678 3682 3686 3688 3689 3691 3692 3695 3697 3698 முதல் 3704 3706 முதல 3710 3713 3715 முதல் 3717 3721 3726 முதல் 3730 3734 முதல் 3739 3747 3749 3752 3753 3755 3759 3763 3764 3769 3771 3774 3877 4039 4308 4511 4614 4747 4775 4865 5081 முதல் 5083 5085 5086 5088 முதல் 5094 5096 முதல் 5108 5110 முதல் 5112 5114 முதல் 5118 5120 முதல் 5124 5126 முதல் 5144 5146 முதல் 5150 5153 முதல் 5156 5158 5159 5161 முதல் 5172 5174 முதல் 5183 5186 முதல் 5206 5209 5248 5318 5409



திருமலையில் 6-11-89 அன்று நடைபெற்ற புஷ்ப யாகத்தின்போது.

# சங்க கால வேங்கடம்

## (வட வேங்கடம்)



தமிழ கூறும நல்லுலகிறகு வட பால் உள்ள நாட்டுப்பகுதியும மேலே குறிப்பிட்ட சங்ககாலதது வேங்கட நாட்டுப்பகுதியும் இயற்கையமைப் பிலும் தட்பவெப்ப நிலைகளிலும் கிட்டத்தட்ட ஒன்றுபோல்காணப்படு கின்றன. அகப்பாட்டில் கூறப்பெற் றுள்ள இப்பகுதியின் இயற்கையமைப் பினைக் காண்போம்.

"நிலநீரற்று நீளசுனை வறப்பக்
குன்றுகோ டகையக கடுங்கதிர்
தெறுதலின்
தேன்றாழ் நீடிய வேய்படு நனந்தலை
நிலவுநிற மருப்பிற பெருபகைசேர்த்தி
வேங்கை வெனற வெருவரு
பனைத்தோள்
ஓஙகண் யானை உயங்கிமதம தேமபிப
பனமா ஒருசிறைப் பிடியொடு வழியும்
கல்லுடை அதர கானம நீநதிக
கடல்நீ ருப்பின கணஞுசால் உமணா
உயங்குபக குயிர்ப்ப அசைஇ
முரம்பிடித்து
அகலிடம் குளித்த அகலபாய்க கூவல
ஆறுசெல் வம்பலர் அசைவிட ஊறும்
புடையலங் கழற்கால் புல்லி"

(அகம்-295)

[வறப்ப-வரட்சியையுடைய; அகைய-எரிய; நீடிய - மிக்க; நனந்தலை - அகனற இடம; மருப்பு - கொம்பு, வேங்கை-வேஙகைப்புலி; வெருவரு-அச்சநதரும், உயங்கி - வருந்தி; தேம்பி-வாடி; சிறை-பக்கம்; அதர-நெறிகளையுடைய: பகடு - எருது: உயிர்பப-இளைபபாற, நீநதி-கடந்து; முரம்பு-வன்னிலம்; குழித்த-தோண் டின; கூவல்-கிணறு: வம்பலர் - புதி யர்; அசைவிட-தளர்ச்சி நீங்க; புடை யல்-கலிககின்ற;

பேராசிரியர். டாக்டர். ந சுப்புரெட்டியார்,
சென்னை.

என்ற பாடலில் நாட்டின் இயற்கை யமைப்பு கூறப்பெறுகின்றது. எங் கும் நிலம் நீரின்றிக் கிடககின்றது மலைச்சுனைகள் யாவற்றிலும் நீர்வற்றி விட்டது. காய்கதிர்ச் செல்வனிட மிருந்து கனன்று வரும் கதிர்கள் குன் றுகளின் உச்சியில் நெருப்பைக் கக்கு கின்றன. அகன்ற பக்க மலைகளில் மூங்கில்கள் காய்ந்து கரிகின்றன. வேங்கைப் புலிகளையும கொல்லும் திறம் வாய்ந்து மாபெரும் களிறுகள் தமமுடைய பெரிய துதிககைகளை நிலவுகிற மருப்புகளில் சுற்றிக் கொணடு ஆற்றலிழநது தளர்ந்தநிலை யில தம பிடிகளுடன அஙகுமிங்கும் இலைகளினிடைக காணபபெறும் மரங்களின நிழல்களில் தங்கிக்கிடக கின்றன. உப்பு மூட்டைகளை ஏற்றி யுள்ள வணடிகளுடன் செல்லும் உம ணர்கள் எருதுகளை வணடிகளினின் றும் அவிழ்த்து இளைப்பாற விடுகின றனர். வனனிலததை இடித்து அகன்ற இடததில் தோணடப் பெற்ற கிணறுகளில் வழிப் போக்கர்களின்

நீர்விடாயைத் தீர்க்கும் அளவுக்குக் கூட நீர் ஊறுவதில்லை. குன்றுகளை யுடைய இத்தகைய புல்லி நாட்டில் மக்கள் செல்லுவதற்கே அஞ்சுகின்ற னர்.

இன்றும் அந்நிலையே காணப்பெறு கின்றது. பத்தாண்டுகட்கு முன்னர் (1979) கூடூருக்கருகிலுள்ள வித்யா நகர்க் கல்லூரிக்குப் பல்கலைக்கழகப் பணியாகச் சென்றிருந்த பொழுது உப்பு விற்கும் உமணர்களைக் கண் டேன். அவர்கள் குடிசைகளை அமைத்துக் கொண்டு தங்கியிருந்த தையும் பார்த்தேன். இன்று அப் பகுதியில் வேங்கைகளும் யானைகளும் காணப்பெறுவதில்லை. அவற்றிற் குப் பதிலாக காட்டுப் பன்றிகளும், நரிகளும் அப்பகுதியில் அலைந்து திரி கின்றன. நொடியுள்ள காட்டுநெறி களில் மாட்டுவண்டிகள் வித்தைகள் செய்வது போல் எழுந்தும் விழுந்தும் செல்லும் காட்சிகளைக் காணலாம். நாடு விடுதலை பெற்றபிறகு சில பகுதி களிலுள்ள நெறிகளில் மண்சாலைகள் அமைக்கப்பெற்றுள்ளன.

தொண்டையர் ஆட்சிக்குக் கீழி ருந்த நாட்டுப் பகுதியும் மேற்கூறப் பெற்ற புல்லி ஆண்ட பகுதியை விடச் சிறப்பாகவுள்ளது என்று சொல்லுவதில்லை. இப்பகுதி பற்றிய

"நிழற்கவின் இழந்த நீரில் நீளிடை
அழலவிர் அருஞ்சுரம் நெடிய
வென்றோர்" —(அகம்-213)

[கவின்-அழகிய, நீர்இல் - நீர்இல் லாத; நீள்இடை - நீண்ட இடம்; அழல்-நெருப்பு]

என்ற அகநானூற்று அடிகளால் இது நீரற்ற வரண்ட இடம் என்றும், மர நிழல் இன்றி நெருப்பைக் கக்குவ தாக நீண்டு வளைந்த நெறிகளை யுடையதாகவும் உள்ளது என்றும் அறிகின்றோம். இன்னொரு அகப் பாடலின்

"பயந்தலை பெயர்த்து மாதிரம் வெம்ப"
—(அகம்-311)

[பயம்-நீர்; தலைபெயர்த்து-நீங்கி; மாதிரம்-திசை; வெம்பு-கொதிக்க]

என்ற அடியால் அப்பகுதியின் எல் லாப் பக்கங்களிலும் நீர் வரண்டு வெப்பத்தால் கொதிக்கின்றது என் பது தெரிகின்றது.

விண்ணுற வோங்கிய பனியிருங்
குன்றத்து
தண்கதிர் திகிரி உருளிய குறைத்த
அறைஇறந் தவரோ சென்றனர்
—(அகம்-281)

[உருளிய - தடையின்றிச் செல்ல; குறைத்த - போழ்த்து வழியாக்கின; அறை-பாறை]

என்ற அகப்பாட்டடிகள் கவிதை நயந்தோன்ற இப்பகுதியினை வருணிக் கின்றன. காய்கதிர்ச் செல்வனுகிய திகிரி தான் செல்வதற்கு வழிஅமைக் கும் பொருட்டு பனியையுடைய சிக ரங்களின் தலை துணித்துவிட்டதாகக் கூறப்பெறுகின்றது. இன்னும் இரண்டு பாடல்கள் இப்பகுதியை, "வெம்முனை அருஞ்சுரம்" (அகம்-263) என்றும் "அருஞ்சுரக்கவலை" (அகம்-359) என்றும் குறிப்பிடுகின் றன. இப்பகுதியினைப் பற்றிக் கூறும் அகநானூறு, நற்றிணை, குறுந் தொகைப் பாடல்கள் யாவும் பாலைத் திணை பற்றியனவாகவே இருத்தல் ஆழ்ந்து சிந்திக்கத் தக்கது. இவை ஏதோ ஒரு முறையில் பாலைக்கூறு களில் ஒன்றினைக் குறிப்பிடுவனவா கவே உள்ளன.

இந்த வேங்கடப் பகுதியில் செழிப் பான இடங்களே இல்லை என்று கூற முடியாது. புறநானூற்றுப் பாட லொன்றில் கல்லாடனார் என்ற புல வர்,

"தண்துளி பல்பொழிந்து எழில்
இசைக்கும்
விண்டு வனைய விண்தோய் பிறங்கல்
முகடுற உயர்ந்த நெல்லின்...
..............................
வேங்கட விரையபின் வடபுலம்
பசித்தென —(புறம் 391)

என்ற புறப்பாட்டடிகளால் வானம் பொய்க்காது மழை பொழிதலால் மலை போன்ற நெற்குவியலை விளைத்த வேங்கடத்தின் வடபுறப்பகுதி வற் கடத்தால் தாக்குண்டு கிடக்கின்றது என்று கூறுவதினின்றும் இதனை அறி யலாம். ஒருக்கால் இப்பகுதி மேற் குத் தொடர்ச்சி மலையை யொட்டிய ஒன்றோ என்று நினைக்கத் தோன்று கின்றது. கர்நாடகப்பகுதியை யொட்டியுள்ள வளமான இந்துப்பூரி, இலேபாக்கி என்ற பகுதிகளை இது குறிப்பதாகவும் கொள்ளலாம். செழிப்புள்ளவைகளாக இருப்பினும் இப்பகுதிகளில் சில சமயம் வற்கட மும் தோன்றுகின்றது.

வடவேங்கடம் இனனதென்பது :

இதுகாறும் கூறியவற்றால் 'வட வேங்கடம்' இன்னதென ஓரளவு வரையறை செய்ய முடிகின்றது. தமிழ்கூறு நல்லுலகத்திற்கு வடதிசை யில் மேற்குக் கடற்கரையிலிருந்து கிழக்குக் கடற்கரை வரையிலுமுள்ள நீண்டமலைத் தொடர்கள், பொறுக்க முடியாத வெப்பத்துடன் கூடிய காடு கள், சுவடுகள் இவற்றுடன் கூடிய குன்றுகள், சிறு குன்றுகள் அடங்கிய பகுதியே சங்க நூல்களில் குறிப்பிடப் பெறும் வடவேங்கடம் என்பது தெளி வாகின்றது. இப்பகுதி மேற்குக் கடற்கரையிலிருந்து கிழக்குக் கடற் கரை வரை தொடர்பு அறாத வட எல்லையாக அமைந்திருப்பதால் அது 'வடவேங்கடம்' என்ற பெயரு டன் வழங்கிற்று. தொல்காப்பியப் பாயிரமாக அமைந்த பனம்பாரனார் நூற்பாவில் 'வடவேங்கடம் தென் குமரி' என்ற தொடரிலுள்ள வட வேங்கடம் ஏனைய சங்க நூல்களில் குறிப்பிடப் பெற்றுள்ள 'வேங்கட மும்' இப்பகுதியையே குறிக்கின் றது என்பதை உறுதியாக அறுதியிட லாம்.

இந்த வேங்கடத்தின் சரியான எல் லைகளை வரையறை செய்து காட்டுவ தற்கேற்ற போதுமான சான்றுகள்

இல்லை என்பது உண்மையே. ஆயினும் கிடைத்த அளவுள்ள சான்றுகளைக்கொண்டு கிட்டத்தட்ட அதன் எல்லைகளை ஓரளவு அறிந்து கொள்ளலாம். ஒங்கோல் வட்டததில் (இப்போது அது பிரகாசம் வட்டமாயிற்று) கிருஷ்ணை நதிக்கருகிலுள்ள நாட்டின் வடபகுதியை புறநானூற்றில் குறிப்பிடப்பெற்றுள்ள 'நுங்கன்' என்ற பெயராலும் பட்டத்தாலும் வழங்கிய அரசர்கள் ஆண்டுவந்ததை முன குறிப்பிட்டேன் அல்லவா? வேங்கடம் என்ற பகுதி வடதிசையில் கிருஷ்ணை நதி வரையிலுமோ அல்லது ஒங்கோலுக்குத் தெற்கில் கிருஷ்ணை நதிக்கும் வடபெண்ணைக்கும இடையிலுள்ள பகுதியின பாதி வரையிலுமோ பரவியுள்ள பகுதிதான என்பதை நிறுவுவதற்கு இக்கருத்து அடிப்படையாக அமைகின்றது. 'வேங்கடம்' என்ற இப்பகுதி கிழக்குக் கடற்கரையின் அருகில் திருப்பதிமலையிலிருந்து தொடங்குகினறது என்பது திருப்பதி மலைக்கு 'வேங்கடம்' என்ற பெயர் அமைநதிருத்தலே ஒருசான்றாக அமைகின்றது. சங்க இலக்கியங்களில் வெப்பம் மிக்க பகுதியாகக்குறிப்பிடப்பெறும்வேங்கடத்தின் ஒரு பகுதியாகவோ அல்லது அப்பகுதியின ஓரத்திலோ இமமலை இருந்திராவிடில் சிறந்த தமிழறிஞர்களாகத் திகழ்ந்த முதலாழ்வார்கள் இம்மலையை 'வேஙகடம்' என று வழஙகியிரார். இவர்கள் பாடல்களில் சஙக இலக்கியச் சாயலும் நெறியும் நிழலிடுவதை நாம் நனகு அறிவோம்

சோணாட்டின் வடஎல்லையில் கிழக்குப் பகுதியில் தொடங்குகின்றது இத்திருப்பதி மலை. இதிலிருநது வேங்கடம் எனற பகுதி பாண்டிநாட்டின் வட எல்லையாக நீண்டு மேறகுக கடற்கரையை எட்டுகினறது.

" ..... வடவயின
வேங்கடம பயந்த வெண்கோட்டுயானை
மறப்போர் பாண்டியா அறத்திற்
காக்கும் —அகம்-27

என்ற அகப்பாடற்பகுதி பாண்டிய அரசன் இந்த வேங்கடம் உள்ள திசையினின்றும வேழங்களைக் கொண்டான் என்று குறிப்பிடுகினறது.

" நேரா வன்தோள் வடுகா பெருமகன்
பேரிசை எருமை நன்னாட்டு உள்ளதை
அயிரியாறு இறந்தன ராயினும்
மயிரிறந்து
உள்ளுப திலல " (அகம்-253)

[பேர்இசை-பெரும்புகழ்; எருமை-ஓர் அரசன்; உள்ளதை-உள்ளதாகில்; அயிரி-ஓர் ஆறு: இறநதனர்-கடந்து சென்றனர்; மயிர் இறந்து - மறவியற்று; உள்ளுப-நினைப்பர்]

என்ற இன்னோர் அகப்பாட்டின் பகுதி கர்நாடகத்திலுள்ள அயிரி என்ற ஆற்றைக் கடந்து சென்று பாலை நிலத்தை அடைந்தனனைக் குறிப்பிடுகின்றது. அயிரியாற்றிற்கு அப்பாலுள்ள பகுதி பாலை நிலம் அல்லது வேங்கடம்'என்பதாக இப்பாடல் வெளிப்படையாகக் குறிப்பிடாவிடினும், அஃது அத்தகைய நிலம் என்பதாக நினைக்கச் செய்கின்றது. ஆயினும்,

" கழை அமல் சிலம்பின் வழைதலை
வாடக்
கதிர்கதங் கற்ற ஏகல் நெறியிடைப்
பைங்கொடிப் பாகற் செய்கனி
நசைஇக்
கான மஞஞைக் கமஞ்சூல மாபபெடை
அயுரியாற் றடைகரை வயிரின நரலும்
—(அகம்-177)

[கழை-மூங்கில்; அமல்-நிறைந்த; சிலம்பு-பக்கமலை; வழை-சுரபுன்னை; தலை-உச்சி; கதிர்-(ஞாயிற்றின்)கதிர்; கதம்-சினம; ஏகல் - பெரிய கற்கள்; நசைஇ-விரும்பி;வயிர்-ஊதுகொம்பு; நரலும- ஒலிக்கும]

எனற இன்னொரு பாடற்பகுதி இதனைத் தெளிவாக்குகின்றது. இதில் இனனொரு தலைவன் அயிரியாற்றைக் கடநது காடுகளுக்கு அப்பால் செல்லுகிறான். அவன செல்லும் நெறியிலுள்ள பக்க மலைகளில் மூங்கில்கள் நிறைந்துள்ளன. அங்குள்ள பவபபத்தினால் சுரபுன்னை வாடிக் கரிந்த நிலையிலுள்ளது.வழியிலுள்ள கற்குவியல்கள் கதிரவனின் வெப்பத்தை ஏற்று அதனை எல்லாப்பக்கங்களிலும் பரப்புகின்றன. இந்த அயிரியாற்றைத் துங்கபத்திரையின் உபநதியாகக் கொள்வர், டாக்டர் கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள். (A History of Tirupati, Part II. இந்நதி கனனடத்தில் 'ஹேகரி' என வழங்குகின்றது.) இந்த உபநதி மேற்குத் தொடர்ச்சி மலையின் கீழ்ப்பகுதியில் உற்பத்தியாகிக் கர்நாடகப்பகுதியின் வடஎல்லை வழியாகப் பாய்கின்றது. இங்ஙனம் கிழக்குக் கடற்கரையில் தொடங்கும் வேங்கடம் மேற்குத் தொடர்சசி மலையின அடிவாரம் வரையில் நீண்டு செல்லுகின்றது. இம்மலையைக் கடந்து சென்றால் மேற்கிலுள்ள கடல் தென்படும்.

எருமை நாடு :

இனி, மேலேசுட்டிய அகப்பாட்டில் (அகம் 253) குறிப்பிட்ட எருமை நன்னாடு இனனதென அறிந்து கொள்வது இன்றியமையாததாகின்றது. மைசூரில் கிடைதத கன்னடக் கல்வெட்டுக்களாலும் (E.Q. Car Vol. X Ch. 20) அதே இடத்தில் கிடைத்த தமிழ்க கல்வெட்டுக்களாலும்(AR for 1907 Part I) எருமை நனனாடு என்பது கர்நாடக மாநிலம் ஆகும் எனறு அறியக்கிடக்கின்றது. (புறம் - 273, ஔவை சு. துரைசாமி பிளளை உரை கணடு தெளிக).

தமிழில் எருமை (விலங்கு)எனபது வடமொழியில மகிஷம் என வழங்கும். புராணக் கதைப்படி மகிஷாசுரன் என்பவன நாட்டில் பேரழிவினை ஏற்படுத்திய மாபெரும் அசுரனாவான். அரசரின் அரண்மனைக் கருகிலுள்ள சாமுண்டி மலையிலுள்ள சாமுணடீஸவரி என்ற தேவதை அந்த அசுரனைக்கொன்று நாட்டைத் தீங்குகளினின்றும் மீட்டுவித்ததாகக் கதை. அந்த நகர் மகிஷாசுரனின்

ஆட்சியின் கீழிருந்ததால் மகிஷாசுர னூர் என்று வழங்கி வந்தது. இது வெள்ளைக்காரரால் மைசூர் என வழங்கப்பெற்று அப்பெயரே அம் மாநிலத்தின் பெயராகவும் நிலைத்து விட்டது. அண்மையில் அம்மாநில அரசு, அதனை அதன் பழம் பெரும் பெயராகிய கர்நாடகம் என வழங்கச் சட்டமும் இயற்றியதை (நாடு விடு தலை அடைந்த பிறகு திருவாங்கூர் கேரளம் ஆயிற்று; தெலுங்கு நாடு ஆந்திரம் ஆயிற்று, சென்னை மாநிலம் தமிழ் நாடு ஆயிற்று, என்பது நன்கு அறிவோம்). எனவே, மகிஷம் என் பது பழைய பெயராகிய 'எருமை' என்பதன் மொழிபெயர்ப்பாகும் என் பதை நாம் அறிதல் வேண்டும். இடைக்காலத்தில் அப்பெயருக்குப் புராண வழக்கும் ஏற்பட்டு சமயச சார்பும் உண்டாயிற்று.

சங்க காலத்தில் அந்நாட்டிற்கு 'எருமை நன்னாடு' என்றுவழங்கியதை அகநானூற்றால் (அகம்-253) அறிகின் றோம்.

" நாரறி நறவின் எருமை யூரன "

(அகம்-36)

" எருமை வெளியனா " (அகம் 72, 73, புறம் 273, 303)

" எருமை குடநாடு " (அகம் 115)

என்ற சங்க கால வழக்காறுகள் இதனை உறுதிபபடுத்தும்; இவை சங்க காலத்தில் மைசூருக்கு வழங்கப் பெற்ற பெயர்களாகும். இவற்றுள் 'எருமை குடநாடு' என்ற தொடர் கவனத்திற்குரியது. தொல்காப்பியம் என்ற தொல்லிலக்கணப்படி செந் தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தில் செந்தமிழ் மொழி வழங்கி வந்தது. உரையாசிரியர்கள் இந்த நாடுகளின் பெயர்களையும் கூறியுள்ளனர்.

தெனபாண்டி குட்டம் குடங்கற்கா
வேண்பூழி
பன்றி யருவா வதனவடக்கு—நன்றுய
சீத மலாடு புனலநாடு செந்தமிழ்சேர்
ஏதுமில் பனனிருநாட் டெண்.

என்ற நன்னூல் விருத்தியுரையில் (நூற்பா-273) காணப்பெறும் வெண்பா இப்பன்னிரு நாட்டின் பெயர்களையும் குறிப்பிடுவதை அறிய லாம். இவற்றுள் 'குடநாடு' என்ற பெயர் 'மேற்கு நாடு' என்று பொருள் தரும் தொடராகும். கேரளமும் கர்நாடகமும்-தமிழகததின் மேற்குத் திசையில் உள்ளவை. ஆகவே, குட நாடுஎன்பது இந்தஇரண்டும் சேர்ந்த நாட்டையோ அல்லது தனித்தனி யாக இவற்றுள் ஒன்றையோ குறிப் பிடும் தொடர் என்கின்றது. எனவே, சேரர் குட நாட்டினின்றும் பிரித்தறிவதற்காகவே 'எருமை குட நாடு' என்ற தொடர் வழங்கப் பெற் றது என்பதை நாம் அறிதல் வேண் டும். இவ்வாறு தொல்காப்பியர் காலத்திலேயே மைசூர் பன்னிரு நாடு களில் ஒன்றாக அமைந்து தமிழ் வழக் கும் பெற்றது. இக்காலத்தில் இங்கும் கேரளத்திலும் செந்தமிழ் பயின்று வந்தது. சங்க காலத்திலும்கூட மைசூர்ப் பகுதியில் செந்தமிழ் வழங்க லாயிற்று என்ற உண்மை இந்நாட் டைப் பற்றிய பாடல்களை சங்க இலக் கியங்களில் சேர்க்கப் பெற்றமையால் அறியக்கிடக்கின்றது. புறநானூற்றுப் பாடல்களும் (புறம்-273, 303) அக நானூற்றுப் பாடலும் (அகம்-73) எருமை வெளியனாராலும் இனனொரு பாடல் (அகம்-72) அவர் திருக் குமாரர் எருமை வெளியனார் மகனார் கடலனார் என்பவராலும் பாடப் பெற்றமை இவ்வுண்மைக்கு மேலும் அரணாக அமைகின்றது. தொல்காப் பியர் காலத்தில் இப்பகுதியில் பயின்று வந்த செந்தமிழ் காலப் போக்கில், பல நூற்றாண்டுகளில் கன னடமாக மாறியது. இவ்வரலாற்றை நினைந்தே பேராசிரியர் சுந்தரம்பிள்ளை யும் தமது மனோன்மணீயத்தில் தமிழ் தாய் வாழ்த்தில் 'கன்னடமும் களி தெலுங்கும் கவின் மலையாளமும், உன் உதரத்து உதித்து எழுந்து ஒன்று பல ஆயிடினும்' என்று பாடி வைத்தார் என்று கருதலாம்.

இதுகாறும் கூறியவற்றால் தொல் காப்பியர் காலத்தில் மைசூர்ப்பகுதி (தற்காலக் கர்நாடகம்) தமிழ் கூறு நல்லுலகத்தின ஒரு பகுதியாக இருந்து வந்தது என்பதனையும், அதன் வட எல்லையில் அயிரியாற்றினை அடுத்து 'வட வேங்கடம்' இருந்தது என்பதனையும் அறிகினறோம். ஆகவே தமிழ் கூறு நல்லுலகத்தின் வட எல்லையாக வழங்கிய 'வேங்கடம்' (வட வேங்கடம்) தென்னிந்தியத் தீப கற்பத்தின் வடக்குப் பகுதியில் கீழ்க் கோடியிலிருந்து மேற்கோடி வரை பரவியிருந்த பகுதியாகும் என பதனைத் தெளிவாக அறிகின்றோம்.

✶

## விண்ணப்பம்

தி. தி. தேவஸதான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்க டேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப் படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்ப தைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

# ஸ்ரீ தேசிகன் திவ்ய சரித்திர ஓடம்

ஸ்ரீமதே நிகமாந்த மஹா தேசிகாய நம:

ஸ்ரீமதித்யாதி தேசிக தாசனுசார்யா

பண்டிதபூஷணது—திருவயிநதை சேடலூா

மஹா மஹோ பாத்யாய

ஸ்ரீநரஸிம்ஹாச்சாாயார் ஸவாமி அருளியது.

ஸ்ரீமாந் வேஙகடநாதார்ய: கவிதார்க்கிகேஸரீ |

வேதாந்தாசார்ய வாயோமே ஸநநிததாம

ஸதாஹ்ருதி ||

அசசுதன தன் அடியோா வாழும்—கோவிந்தா

அயிந்தை நகர் வநதமாநது

புவனி எலலாம் பவனி வரும்

எங்கள் தேசிகராம கப்பலிது

முடுகு

சீராரும வேங்கடமாமலேயிலே வாழும

நாராயணன தானும் மண்மேலே நின்ற

நோய்கள் தவிர்க்கவே திருவுளளம் பற்றி

தன்னாலும் முடியாத காரியத்தைச செய்ய

கச்சிதனனில் புரட்டாசித் திருவோண நாளில்

தூப்புல் குடியில் குலமணியாய்த தோனறி

ஐந்தாம் பிராயத்தில் அம்மாளருள் பெற்று

அம்மாளும அப்புள்ளார் திருவடியை அடைந்து

சாஸ்திரங்கள் எல்லாம சடக்கெனக் கற்று

பிராயம இருபதிலே பாரங்கதராகி

நாலு வேதஙகளும நங்கூரமாக

நலமுடை வடகலே கொடி யொனறு நாட்டி

திருமொழிகள் முதலான ப்ரபந்தங்கள் எல்லாம்

திடமான கொடியிலே கயிறாக மாட்டி

ஆழ்வார்கள பதின்மரும் அதினமேலே ஏறி

அடைவுடன் வழிதேடி சுக்கான்திருப்ப

காஞ்சிநகர் விட்டுக கிளமபியே கப்பல

தேவாதி நாதனுடைய கோயிலேததேடி

பரமகுரு எங்களுடைய தேசிகர் கப்பல்

பாலாறு கரைதாண்டி வருகுதையா கப்பல்

அழகுடைய கருடநதிக கரைதன்னிலே வந்து

அயிநதை மாநகர் வந்து சேர்ந்ததையா கப்பல்

ஏலேலோ—விபுதேசா—கோவிந்தா

ஏலேலோ குரு ராஜா.

கருணை என்னும் கடல் நடுவே—கோவிந்தா

ஞானமென்னும் பாய் விரித்து

மறையவர்கள் ஜய ஜயயென்ன

மகிழ்ந்து வரும் கப்பலிது.

முடுகு

நரஹரியின் முன்பாக ஔஷதாத்திரியிலே

அச்வத்த மரத்தின்கீழ் கருடனைக் கணடு

பரிமுகனின் மூாத்தியும மந்திரமும் பெற்று

அப்பரிமுகன தன்னையும் ஸாக்ஷாத்கரித்து

பன்னுகலே நால்வேதப் பொருளையு மெல்லாம்

லாலாம்ருதத்தையும் ப்ரஸாதமாயக் கொணடு

அச்சுதன அடியிணையை அநுபவித்து நிற்க

அயிந்தை அமர்ந்தானும வழிமறித்திவரை

தோத்திரங்கள் பாடென்ன அப்படியே இவரும்

அவனடிமேல் அடியுரையால் ஐம்பது மேத்தி

மணிகோவை முதலாகப் ப்ரபந்தமும் சொல்லி

கோபாலனடியிணைமேல் இருபத்தி ஒன்றும்

அம்புருஹ வாஸிநி மேல் இருபத்தி ஐந்தும்

ஸ்தேயா விரோதமும விளங்கவே சொல்லி

தெளிவுடைய பெணணையாறு கரைதன்னில் வநது

திருக்கோவலூர் கண்டு திரும்புதையா கப்பல்

ஏலேலோ விபுதேசா கோவிந்தா

ஏலேலோ குருராஜா

உலகமெல்லாம இருள்நீஙக—கோவிந்தா

உடையவர் தம் மதம் விளங்க

அறுசமயக் கொடியறுத்து

அமாந்து வரும் கப்பலிது

முடுகு

கோவலூர் ஆயன்மேல் இருபத்தி எட்டும

ஸச்சரித்ர ரக்ஷையும் நிரூபித்தருளி

பரமகுரு எங்களுடைய தேசிகர்கப்பல்

பாலாறு கரைதாண்டி போகுதையா கப்பல

ஏலேலோ விபுதேசா—கோவிந்தா

ஏலேலோ குருராஜா

காசினியோர் தாம் வாழும்—கோவிந்தா

காஞ்சி நகர் வந்துதித்து

தேசமெல்லாம் பரவி வரும்

எஙகள் தேசிகராம் கப்பலிது.

முடுகு

தேவப் பெருமாள் மேலே ஐம்பத்தி ஒன்றும்

அடைக்கலப் பத்தாகப் பதினொரு பாட்டும்

ஐந்திரண்டு ஒன்றுன அர்த்த பஞ்சகமும்

பஞ்சகாலப் பிரிவுள்ள தினசரியும் சொல்லி

பதிமூன்று பாட்டுள்ள பன்னிரு நாமமும்

தீபப் ப்ரகாசர்மேல் ஒன்றிலா அறுபதும்
அஷ்டபுஜகர் மேல் எட்டோடிரண்டும்
சொன்னவண்ணம் செய்வாரமேல் அழகானபத்தும
எட்டுமொன்றும் கொண்ட காமாஸிகாஷ்டகமும்
ஸமரபுங்கவனமேல பாங்காகப் பத்தும்
சரணுகதியைச் சொல்லும் ந்யாஸ தசகததையும்
ஸம்ப்ரதாய சுத்தியோடு பதவியாகச் சொன்ன
தத்வ ரஹஸ்யத்தோடு நவநீதம சொல்லி
திருமலேயிலே வாழும் திருவேங்கடத்தானே
தொழுதேத்த வேண்டுமென்று திருவுள்ளமபற்றி
திருமலேயை நோககியே பரயாணம் செய்து
வேங்கடவனருள் மேலே நூற்றெட்டும் செப்பி
ரஹஸய நவநீதத்தை ரஸமாகச் சொல்லி
அஹோபிலம் முதலான வடநாட்டுக் கோயிலே
வலமாக வழிபட்டுத் திரும்பி வரும்நாளில
பெரும்பூதூர் மேவிவாழும் எம்பெருமானுரும்
திருவளளூர்க் கதிகாரி வீரராகவனும்
திருநின்ற ஊரிலே பக்த வத்ஸலனும்
திருக்கடல் மல்லே தலசயனததானும்
திருவிடந்தை மேவும் லக்ஷ்மீ வராஹனும்
திருவல்லிக்கேணியில் பார்த்தசாரதியும்
முறையாக சேவைதர கச்சிநகர் வநது
நாற்பத்தெட்டாமாண்டு நள வருஷம் தன்னில்
ஆவணியாம் மாதத்தில் ரோஹிணி நாளில்
அருள் வரதரைப்புத்திரராய் அவதரிக்கப் பெற்று
அவருடன்கூட வஸித்து வரும்நாளில்
தேவராஜன் உத்ஸவத்தை மாயிகள் தடுகக
அவர்களே நிரஸித்து உத்ஸவத்தை நடத்தி
திருச்சினன மாலேயாலே தோத்திரித்து நிற்க
அங்கு நிரஸ்தனுன மாயிகளில் ஒருவன
மந்திரததின் சக்தியால் குளத்துநீரைக் குடிக்க
தூணேக கிழித்து அந்நீரை வெளிவரச் செய்து
தர்மங்களானதொரு பலகைகள் சேர்த்து
தத்வங்களானதொரு பாயமரம் நாட்டி
அருமறைகளானதொரு ஆணிகள தைதது
ஆறு சாஸதிரங்களும் பீரஙகியாக
ஹயக்ரீவர் அவைகளுககு அதிகாரியாக
காஞ்சிநகா விட்டுக் கிளமபியே கப்பல்
கஸ்தூரி ரங்கருடைய கோயிலேததேடி
பாலாறுகரை தாணடி போகுதையா கப்பல்
திருச்சோழ நாட்டை ஒரு நொடியிலே தாண்டி
காவேரிக் கரைதன்னில் உதயத்தில் வந்து
கஸ்தூரி ரங்கருடைய கோயிலேக கண்டு
கண்ணிலே ஆநநத பாஷ்பஙகள் உதிர
கமலங்கள் போல இருகைகளேயும கூப்பி
செழிப்புடைய வடதிருக்காவேரி தாண்டி
ஸ்ரீரங்கநகர் வந்து சேர்ந்ததையா கப்பல்
ஏலேலோ விபுதேசா கோவிந்தா
ஏலேலோ குருராஜா.

பதிவாகளும்துதி செய்ய கோவிந்தா
பாம்பணே மேல்பள்ளி கொளளும்
ரவிகுலத்தோர் குலதெய்வம்
எங்கள் ரங்கருடைய ஸந்நிதிக்கு

முடுகு

இவ்வுலகில் ஒருவரும் ஈடில்லேயென்று
எங்கள்குரு தேசிகரை லேசாக எண்ணி
அத்வைத வாதிகள் கக்ஷிகள் சொல்ல
கணடாவதாரர் அதைக கணடிதது மேலும்
ஒன்றுககு நூருக தூஷணங்கள் சொல்லி
சணடப் ப்ரசணடமாய வாதங்கள் செய்ய
வாதிகள் எல்லோரும் வெகுணடோடி நிற்க
அரங்கநகர் நாதன் அரிதாகக் கொண்ட
வேதாந்தகுரு என்னும பிருதைக் கொடுக்க
அவனுகந்த செய்யாளும் ஸர்வதநத்ர ஸ்வதந்தரர்
எனனுமோர் பட்டததை பிருதாயளிக்க
அணியரங்கர் உருமேலே எட்டுடனே நாலும்
அவதாரம பத்தின்மேல பத்தோடு மூன்றும்
அத்வைத மதத்தினமேல் தூஷணஙகள் நூறும்
அனேத்தையும் அறிவிக்கும் இணேயற்ற தத்வ
முக்தா கலாபத்தை முதலிலே சொல்லி
அதறகேறற உரையாகும் ஸர்வார்த்த ஸித்தியும
அதிகரண தர்ப்பணத்துடன் நிக்ஷேப ரக்ஷையும
பாஞ்சராத்ர ரக்ஷையுடன ந்யாய பரிசுத்தியும்
ஸேச்வர மீமாம்ஸையோடு மீமாம்ஸாபாதுகையும
தேசுயரத் தேருர்ந்து தம் திருவடியைக் காட்டும்
கண்ணனுடைய கருத்தைக் கறவாமல் விளக்கும்
தாத்பர்ய சந்த்ரிகையும் ரக்ஷையுடன பாட்டும்
ந்யாய ஸித்தாஞ்சனத்துடன் நயாஸதிலகமும்
மாத்ருகை இரண்டுடன் ஸநதேசம் மூன்றும்
மாதவன் மகனுக்காக ஸுபாஷித நீவியும
தத்வ ரத்நவளியும் அதனுடைய ஸங்க்ரஹமும்
விரோதிகளே விரட்ட வாதி த்ரய கணடனமும்
பூமிப் பிராட்டி மேலே முப்பத்து மூனறும
வேதார்த்த ஸஙகர ஹததின வ்யாக்யானமும் சொல்லி
ஸ்ரீரஙகநகர் விட்டுக கிளம்பியே கப்பல்
திரைகடல் போல்வரும் கொள்ளிடம தாணடி
சித்திரகூடம் வந்து ஒரு நாளிருநது
தேவாதி நாதனேகணடு கை தொழவே
கங்கையில மிகும் கருட நதிக்கரை தன்னிலவந்து
அயிந்தை மாநகர் வநது சேர்நததையா கப்பல்
ஏலேலோ விபுதேசா கோவிந்தா
ஏலேலோ குருராஜா.

மாறன் மறை கடலநடுவே—கோவிந்தா
ப்ரஜ்ஞை என்னும் பாய்விரித்து

ஆச்ரிதர்கள் துயரறுக்கும்
எங்கள் குருவரராம் கப்பலிது.

முடுகு

அடியவர்ககு மெய்யனின வடிவழகைச கணடு
அதுதனனையே அநுபவித்து அயிந்தையில இருகக
பதினெட்டு மதத்தருமாய் ஒன்றாகவந்து
வாதத்திறகு அழைககு முன்னாள் புணராத
பரமதப் போா பூரித்து மகிழ்வுடனே நிற்க
இவர்தமககே அருளபுரிய அயிந்தையில் முன்னுறைநத
அடியவர்க்கு மெய்யனை தேவாதி தேவன்நாதன்
கவிதார்க்கிக ஸிம்மமென்று அருளிப் பாடிடவே
இருபத்துநான்கான அதிகாரம கொணட
பரமத பங்கத்தைப் பாங்காக இயற்றி
திருவாழியாழ்வான்மேல் ஒன்பதும சொல்லி
கருடனின்மேல தணடகமும் ஐம்பத்திரணடும்
பரிமுகனமேல் பாங்காக முப்பததி மூனறும்
மஹாவீர வைபவகத்யமும் சொல்லி
உத்தம பக்திதானே ச்ருங்காரமாய்மாற
சிந்தைகவர் பிராக்ருதம ஒருநூறு கூறி
ஈஸா வாஸியத்திற்கு உரைஒனறு செயது
நவரத்ன மாலைஒன்று ரஸமாகச் செப்பி
முந்தைமறை மொய்ய வழிமொழி எனறு சொன்ன
முகுந்தனருள் பெற்று மகிழ்வடைந்து நிற்க
பரவாதிசொல் கொண்டு வந்தஒரு கொத்தன்
கிணறொன்று கட்டியே பிருதைக்கார் என்ன
அக்கொத்தன் கொடுத்ததான கோணக்கல் கொண்டு
கசசிதமாய்க் கிணறொன்று கட்டியே முடித்து

அழகுடைய கருடநதிக்கரை தன்னைவிட்டு
பாலாறுகரை கடநது போகுதையா கப்பல்
ஏலேலோ விபுதேசா கோவிந்தா
ஏலேலோ குருராஜா.

தேவர்கள் துதிசெய்ய—கோவிநதா
அத்திகிரி வீற்றிருக்கும
திசைமுகனதான் தொழும் தெய்வம்
எங்கள் தேவராஜன் ஸநநிதிக்கு

முடுகு

கருட மந்திரத்தால பாம்பாணடியை வென்று
வைராக்ய பஞ்சகத்தை வித்யாரணயனுக்கெழுதி
ஆஹாரத்தின் நியதியை இருபததொரு பாட்டாக்கி
அத்திகிரி மஹாத்மியத்தை அழகாக ரூபித்து
கல்யாண விஷயமாய் பொருளநாடி வந்த
ப்ரும்மச்சாரி ஒருவனுக்கு வேண்டிய பணத்தை
பிராட்டியின் தோததிரத்தால் வரவழைத்துக் கொடுத்து
ரஹஸ்ய ரத்னவளியுடன் ஹ்ருதயமும் சொல்லி
சுளகங்கள் இரண்டுடன் ஸார தீபமியறறி

தக்ஷிண தேசததுறையும் பெருமான்களை ஸேவிக்க
திருவுள்ளம் பறறியே துரிதமாகச் சென்று
திருவாலி திருநகரி திருப்பதி அடைந்து
ஸர்வேஸ்வரன் பக்கல் ஸர்வார்த்தம் கிரஹித்த
திருமங்கையாழ்வாரை திருவடி தொழுது
திருக்குடந்தை வந்து ஒரு நாளிருந்து
ஆராஅமுதனுடைய அடிகளைப் பணிந்து
திருப்பேர் நகர் நாணடி ஆடுதுறை செனறு
ஆமருவி அப்பனை அழுந்தூரில் கணடு
திருவிணணகா நாதனை திருவடி தொழுது
மல்லாணட திணதோளனை மதுரையில் கணடு
மங்களாஸாஸனம் செய்தேத்திப் போந்து
ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாளைக் கணடு
கோதாஸ்துதியான இருபத்தொன்பது சொல்லி
ஆழ்வார் திருநகரியில் சடகோபனை தொழுது
அவருடைய அருளபெற்று திருக்கோளூர் சென்று
தொல் வழிகாட்டும் மதுரகவியைப் பணிநது
யதிராஜர் உகந்தருளும் செல்வப்பிள்ளையை நாடி
ராமாநுஜன் பொனனடிமேல் ஸப்ததியைச் சொல்லி
திருவனந்தபுரமேகி பத்மநாபனைப் பணிய
பதிகள் நூற்றெட்டுளளும முதலான கோவிலில்
ஆராதனம நினறசெய்தியைக் கேட்டு
பிரதிவாதியாலே ஒரு பழுதாகாதென்று
அரங்கமாநகர் தேடிய வேகமாய்ச் சென்று
ஓடிவரும் வேளையிலே வழியிலே ஒருநாள்
ஆராதனமாகும் ஸ்ரீ ஹயக்ரீவனுக்கு
வேறொன்று மில்லாமல் தோயமே அமுதுசெய்ய
பரிமுகனும கடலையுணடு போகாமல்நிற்க
இரவிலே பால்கொண்டு பரிமுகனை ப்ரீதிசெய்து

செழிப்புடைய தென்திருக்காவேரி தாண்டி
ஸ்ரீரங்கநகர் வநது சேருதையா கப்பல்
ஏலேலோ விபுதேசா கோவிந்தா
ஏலேலோ குருராஜா.

அரங்கநகர் பயம்நீங்க—கோவிந்தா
ஆராதனங்கள் சரி நடக்க
பிற சமயம் பறந்தோட
விரைநது வரும் கபபலிது.

முடுகு

ரக்ஷைகள் நான்குமே நங்கூரமாக
தாத்பர்ய சந்த்ரிகையை கொடியாக நாட்டி
மணிக்கோவை முதலான பிரபந்தங்களை எல்லாம்
கொடியிலே திடமான கயிறாக மாட்டி
ரஹஸ்யங்கள் வழிதேடி சுக்கான திருப்ப
பரமத பங்கத்தைக் கவசமாகப் பூண்டு
ஸாவார்த்த ஸித்தியைக் கேடயமாகக் கொணடு
சத தூஷணீ தன்னைக் கத்தியாகப் பிடித்து
ந்யாய ஸித்தாஞ்ஜனத்தை மையமாகத் தரித்து

ந்யாய பரிசுத்தியை நாவிலே கொண்டு
ஹயக்ரீவன் தன்னை ஹ்ருதயத்தில் தாங்கி
வாதிகள் முன்பாக சடக்கெனத் தோன்ற
எதிரிகள் கவிவாதி ஸிம்மத்தின்முன்பே
எதிர்நிற்க மாட்டாமல் எழுந்திருந்தோட
அப்பொழுதே ரங்கருக்கு ஆராதனம்செய்ய
அங்குள்ள பேர்களுக்கு ஆக்ஞைகள் பண்ணி
அங்கங்கள் பத்துள்ள நாடகம ஒன்றும
ஸர்க்கங்கள நாலாறில் காவியம் ஒன்றும்
அரங்கருடைய அடியான சடகோபன்மேலே
ஓரிரவில் ஆயிரததை பாங்காகச் சொல்லி
ஸமஸயா ஸஹஸ்ரியை ஸதஸஸிலே பூரித்து
ரஹஸ்ய ரக்ஷையுடன் ஸார ஸாரத்தையும
ஹம்ஸ ஸந்தேசத்தோடு ந்யாய விமசதியும்
அதுதன்னை குறித்துரைக்கும் வ்யாக்யானமும்செயது
ஸம்ஸ்க்ருத த்ராவிடத் தனியன்கள் இரணடையும
அடியார்கள் அநுஸந்திக்க அப்யுபகமம் செய்து
ஹரிதாஸா பாதுகையை அணியாகக கொணடு
ஹயக்ரீவன் அருளாலே ஸ்ரார்த்தத்தை நடத்தி
ஆழ்வாரின நியமனத்தை தலைககட்ட நினைத்து
அருளிச் செயல்களுக்கு அரிதான உரையாய்
நிகம பரிமளத்தை நிரூபித்துப் போந்து
ரத்னவளியுடன் ஸாரத்தைச் செப்பி
பரம பதததிற்குப் படிகளைக்கட்டி
சரணுகதி ஸாரத்தை ஸாங்கமாகக் காட்டும்
அபயப் ப்ரதான ஸாரம் அழகாகச சொல்லி
சிகாமணி இரண்டுடன் அஞ்சலி வைபவமும்
ப்ரதான சதகத்தோடு உபகார ஸங்க்ரஹமும்
ஸார ஸங்க்ரஹத்தோடு மதுர கவிஹ்ருதயமும
முனிவாஹன போகத்துடன க்ஷோட சாயுத
ஸ்துதியும்

ஹரிதின திலமான பதினேழும் செப்பி
ஸதய மஙகலத்தில் சில காலமிருந்து
அரங்கம் தன்னையே மீண்டும் அடைநது
துலுக்கரின ஹிம்ஸையாலே அரங்கன வெளியேற
தம்மிடததில் ந்யஸ்த்தமான குமாரர்கள் இருவருடன
ச்ருதப்ரகாசிகையை ரக்ஷ்யமாகப் பெற்று
செல்வப் பிள்ளையை மறுபடியும்நாடி
அரங்கத்தின் துயர்நீங்க அபீதிஸ்தவம் சொல்லி
ஆராதன காரிகையுடன முப்புரி நூல்ப்ரதிஷ்டையும்
வ்யாக்யானத்துடன் கூடபூகோள நிர்ணயமும்
ரஹஸ்ய த்ரயங்களுக்கு சுருக்குகளும் செப்பி
பஹுதான்ய வத்ஸரமாம் ஆவணி ஹஸ்தத்தில்
அவதரித்த தனியனை அடியார்கள் சொல்ல
தனியன்கள் மூன்றுக்கும் விபாகம் செய்து
கொப்பணார்யனைக் கொண்டு துலுக்கர்களைவிரட்டி
அரங்கத்தில் அரங்கனை திருப்ரதிஷ்டை செய்ய

திருநாராயண புரமவிட்டுக் கிளம்பியே கப்பல்
செழிப்புடைய தென் திருக்காவேரி தாண்டி
ஸ்ரீரங்கநகர் வந்து சேர்நததையா கப்பல்
ஏலேலோ விபுதேசா கோவிந்தா
ஏலேலோ குருராஜா.

ரஙகனையே துதிசெயய—கோவிந்தா
ப்ரதிஷ்டைக்கு நாள் குறிக்க
ஆழ்வார்கள் மதம் விளங்க
விரைந்து வரும் கப்பலிது.

முடுகு

ஸவாமியை முன்னிட்டு ஸந்தோஷமாக
கொப்பணார்யன் தானும் கார்யங்களைச் செய்து
அரங்கனுடைய ப்ரதிஷ்டையை நனருக நடதத
அத்யயன உத்ஸவத்தை வாதிகள் தடுக்க
ஆழ்வார்கள் எல்லோரும் அவதார புருஷர்கள்
அவர்களுடைய ஆராதனம் சாஸ்திரீயமாகும்
அருளிச் செயல்கள் தாமும் வேதம்போல் நித்யம்
என சாஸ்திரம் கொண்டு நிரூபித்துக்காட்டி
அத்யயன உதஸவத்தை யதாக்ரமம் நடத்தி
பல்லாணடு துடங்கும்முன "லக்ஷ்மீ" என்றுரம்பிக்க
அர்ச்சகன் முகமாக அதுதன்னைத் தடுத்து
ஸவாமியின் தனியனைமுதலிலே ஸேவி
என்றரங்கன் தானே நியமித்தருள
அங்கிருந்த பெரியோரும் களிப்புடனேஏற்க
அது முதலப்படியே எல்லாத் தேசத்திலும்
அரங்கருடைய நியமனம் நன்ருக நடக்க
அனுதினமும் அனுஸந்திக்க அனுகூலமாக
ஆழ்வார்கள் அவதரித்த நாளுர்களையெல்லாம்
ப்ரபநத ஸாரத்திலே குறிப்பாகக் காட்டி
அக்ஷோப்ய வித்யாரண்ய மத்யஸ்தம் செய்து
சகார ஸமர்த்தனத்தை சதுரமாகச செப்பி
ஹஸ்திகிரி மாயிகளை தாஸன் தன்ருல் வென்று
வேதாந்த ஸூத்திரங்களை வியாக்யானம் செய்யும
ஸ்ரீபாஷ்ய க்ரநதத்திற்கு விரிவான உரையாய்
ஸ்ரீதத்வ டீகையுடன ஸாராவளியும் சொல்லி
சிலபிராஜன வ்யாஜமாக ரங்கனுடைய நியமனத்தால்
ஆசார்ய ச்ரேஷ்டரான தம்முடைய திருவுருவை
ஜ்ஞானகோச முத்தரையுடன் ஸுந்தரமாகச் செய்து
சிலபார்தத ஸாரத்தையும் சுருக்கமாகச் சொல்லி
அவதாரப் பயனன மணநோய் தவிர்க்க
ஸர்வ சாஸ்திரமான ரஹஸ்யத்ரய ஸாரத்தை
குருபரமபரா ஸாரத்துடன் கருத்துடனே குறித்து
கணவனுகத் தாம்வரித்த கமலாபதியைக் காண
ஸ்ரீரங்கநகர் விட்டுக் கிளம்பியே கப்பல்

(39-ம் பக்கம் பார்க்க)

# திருப்பாவையில் கேசவாதி பன்னிரு நாமங்கள்

டாகடா. எல. வீரராகவன்-மதுரை.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பரதாயத்தில, ஆசார்யனை அடைந்து ஸமாஸ்ரயணம் ஆனபிறகு பனனிரு திருமண காப்புகளையும தரித்துக்கொண்டு கேசவன் முதலான பன்னிரு நாமஙகளையும், அந்தந்த எம்பெருமானுடைய ஸ்வரூபங்களை, அவர்கள்தம் ஆயுதங்களோடு அநுஸந்திப்பது வழக்கம.

"வேதமனைததுககும விததாகும கோதை தமிழ்" எனப் போறறப் படும் சங்கத் தமிழ்மாலையில்- திருப பாவையில இநத பன்னிரு நாமங் களும் தெளிவாகவும், அந்த திரு நாமங்களைக குறிககக்கூடிய அடிகளாலும் எடுத்தியம்பப்பட்டுள்ளன.

அநதந்த திருநாமஙகளையே கூறியிருக்கும பாசுர அடிகளை முதலில காணபோம.

1. கேசவன

"கேசவனைப் பாடவும நீ கேட்டே கிடத்தியோ" பாசுரம் 7

"வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை" ,, 30

2. நாராயணன

"நாராயணனே நமக்கே பறை தருவான" ,, 1

"நாராயணன மூர்த்தி" ,, 7

"நாற்றத்துழாய்முடி நாராயணன்" ,, 10

3. மாதவன

"மாமாயன் மாதவன்" ,, 9

"வங்கக் கடல் கடைநத மாதவனை" ,, 30

4, கோவிந்தன

"கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா" ,, 27

"குறைவொன்றுமில்லாத கோவிந்தா" ,, 28

"இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா" ,, 29

5. பதமநாபன் :

"பத்மநாபன் கையில்" ,, 4

6. தாமோதரன் :

"தாயைக்குடல் விளக்கம் செய்த தாமோதரனை" ,, 5

7. வாமனன :

"ஓஙகி உலகளந்த உத்தமன் பேர்பாடி" ,, 3

8. திரிவிக்ரமன

"அம்பரமூடறுத்து ஓங்கி உலகளநத உமபாகோமானே" ,, 17

மேற்படி பாசுரங்கள மூலம் எட்டு நாமாக்களைத் தெளிவாகக் கூறப்பட்டது. ஏனைய நான்கு திருநாமங்களையும் அந்நாமாக்களின் பெருமையால் உணர்த்தப்படுகிறது.

9. விஷ்ணு : பண்டிதர்கள் முதல் பாமர மககள் வரை அனைவரும் நன் கறிநத பெயர் இதுவேயாகும். "எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவர்" என்று பொருள்.

'உலகினில் தோறறமாய் நின்ற சுடரே' பாசுரம் 21

'நெருப்பென்ன நின்ற நெடுமாலே' ,, 2

'மாலே, மணிவண்ணா' ,, 26

'ஆலின் இலையாய்' ,, 26

'தேவாதி தேவனை' ,, 8

'ஊழி முதல்வனை' ,, 4

இங்கு மால் என்றாலே விஷ்ணு எனப் பொருள்படும்.

10. மதுசூதனன : எம்பெருமானுடைய திருமேனியினின்று வெளிப் போந்த அழுக்கினின்று உண்டான வன் மது எனும் அரக்கன. அவ்வரக்கனை ஸம்ஹாரம் செய்தமையால் மதுசூதனன எனும் பெயர் பெற்றான். அவனைத் தன் மடிமீது இருத்திக் கொன்றார்.

'பொல்லா அரக்கனை கிள்ளிக் களைந்தானை' பாசுரம் 13

'வல்லானைக் கொன்றானை மாற்றானை மாற்றழிக்கவல்லானை' ,, 15

'செற்றார்க்கு வெப்பம கொடுக்கும் விமலா' ,, 20

11. ஹ்ருஷீகேசன :

திருப்பல்லாண்டில பெரியாழ்வார் "அண்டக்குலத்திற்கதிபதியாகி அசுரர் இராக்கதரை" 'இண்டக்குலத்தை யெடுத்துக் களைநத இருடீகேசன்' என இராமனையே இருடீகேசன எனப் புகழ்ந்தார். தநதை தம் வழியிலே கோதை நாச்சியாரும் பாடுகிறார். "மனத்துக்கினியானைப் பாடவும்" பாசுரம்-12. யார் அவா? தென இலஙகைக் கோமானைச் செற்றவன் என்றே அறுதியிட்டுக கூறினார்.

12. ஸ்ரீதரன் :

பன்னிரு நாமங்களுள் ஏறறம்பெற் றது ஸ்ரீதரன் எனும் திருநாமம். ஸ்ரீ எனப்படும் மஹாலக்ஷ்மியை தாங்கிக் கொண்டிருப்பவன்,

'அகலகில்லேனிறையுமென்று அலர் மேல் மங்கைஉறை மார்பன்' ஸ்ரீநிவாஸன அல்லவா. பெருமானை விடுத்து பிராட்டியை மட்டும் விரும்பிய ராவணன தொலைநதான. பிராட்டியை விடுத்து பெருமானை மட்டும் விரும்பிய சூர்பணகைஅவமானப்பட்டாள். எனவே தாயாருடன் சேர்ந்த எம் பெருமானே நமக்குப் புகல். கடைசிப் பாசுரத்தில்

"செங்கண திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எஙகும திருவருளபெறறு இனபுறுக"

என்றே கூறப்பட்டது.

திருமால் என்பதாலேயே ஸ்ரீதரன் என ஆயிறறு. சந்தேகத்திற்கு இட மின்றியே 'செல்வத் திருமால்' எனக் கூறப்பட்டு, 'செங்கண் திருமுகத்து செல்வததிருமால்' அருளால் திருவருள் பெற்று இன்புறுவோம் என்று நிலைநாட்டப்பட்டுள்ளது.

இநதப் பன்னிரு நாமங்கள்தான் நமக்குக் காப்பு.

# துளவத் தொண்டாற்றிய தூயவர்

உலகம மாயையின் பிடியில அகபபட்டுள்ளது. மாயை எனற சொல் மயககுமதனமையது என்ற பொருளுடையதாகும். நாம உண ணும் உணவின பல வகைகளிலும, உடுக்கும் உடையின பனனிறஙகளி லும், பாாககும பொருள்களின் பல தோறறங்களிலும் நம மனதைப் பறி கொடுத்தவர்களாய வாழ்ந்து வரு கிறோம. இவை போதாதெனறு மண, பெண, பொன் என்ற மூவாசை பிடித்து உழலபவாகளாயும உள் ளோம். 'அவைதாம் எலலாம' என்ற நினைப்போடு அல்லறபட்டு ழைத்துப்பொருளீட்டி அனைத்தையும் அவற்றுக்கே செலவழித்து நுகர் கிறோம். அநநுகர்சசியானது நம்மை

திரு. வே. சோமசுந்தரம்-செனனை.

உடலளவில் மட்டும் வாழ்பவர்க ளாக்கி விடுகிறது. நாம, நம்மு டைய உண்மையானநிலையை உணர்ந தவர்களாய் இருப்பின் இவ்வுடம் பின்மீதான பறறு போய் விடும. நம்மில் குடிகொணடிருக்கும் ஆன்மா ஈடேறுவதறகான வழி வகைகளில் மனம் ஈடுபாடு கொளளும் ... ஒருவ னை இறைவன மீது ஒரே சிநதை யாய பகதி வயப்படும். எனவே, இறைவனின படைப்பான நாமனை வரும் அவனைச செனறடைவதே நாமெடுதத பிறவியின் ஒரே நோகக மாகும. ஆனல அவ்வுயரிய நோக கம் ஈடேற விடாமல மாயை தடுத துக்கொண்டிருக்கிறது. அமமாயை யின் பிடியானது சில சமயங்களில் இறையடியார்களையும் விட்டு வைப்ப தில்லை. அதே சமயத்தில் மாயை வயப்படும் அடியாாகளை ஆண்டவனே வலிய வந்து தடுத்தாட் கொள் கிறன். இப்பெருமையை உணர்த்து வதே விப்ரநாராயணர் என்ற தொண டரடிப்பொடியாழ்வாரின திருநதிய வாழ்வாகும்.

தொண்டரடிப் பொடியாழ்வார் அவதரித்த திருத்தலம் சோழவள நாட்டில் புள்ளம் பூதஙகுடிக்கு அரு கிலுள்ள மணடஙகுடி எனபதாகும். அவர் கலி தோன்றியபின் 289ஆவது வருடமான ப்ரபவ ஆணடு மாாகழி மாதம் ஒருசெவவாய்க்கிழமையன்று கேடடை நட்சத்திரத்தில் இபபுவிக் கண தோனறியதாகக் கூறுவர் பெரி யோா, அவா எம்பெருமாளுடைய வன மாலையின் அமசமுடையவரெனறும் சொலலப்படுகிறது. அநதணர் குலத் தோன்றலாகிய அவர் தம்முடைய தந்தையாரால் "விப்ரநாராயணன்" எனற திருப்பெயரிடப் பட்டவராய் சகல சாஸ்திரங்களும் கற்றுணர்ந்த வேத விற்பனனராய் வளர்ந்து வர லாளுர்.

கல்வியில் சிறந்த விப்ரநாராயணர் திருவரங்கத்தில் கோயில் கொண் டெழுந்தருளியுள்ள எம்பெருமானைச் சென்று சேவிக்கும பெரும பாக்கி யத்தைப் பெற்றார். அத்திருவரங் கன அவரை முதல் சநதிப்பிலேயே முழுக்க ஆட்கொண்டு விட்டான். அவனுடைய எல்லையறற எழிலு டையச் சயனத திருக்கோலம விப்ர நாராயணரின உடலையும, உள்ளத் தையும் ஒருசேர உருக்கிவிட்டது. அவன திருமுனனின்றும எங்கும் அகல ஒட்டாத பக்தி வயப்பட்டவ ராளுா.

அவ்விதம் அவரை பக்தியில் பெரிய பித்தராக்கிய பரமன், அவரே தாமி யற்றிய "திருமாலை" என்ற திவ்ய பிரபந்தத்தில் பாடியுள்ளவாறு,

"குடதிசை முடியை வைத்துக்
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித தென்திசை
இலங்கை நோககி"

அரவணைத துயில கொண்டுள்ளான். அவன் கடலநிறக கடவுள அவரால் "எநதை" என்று அனபுடன் அழைக் கப்பட்ட அகிலததின தநதை அத தகையவனின,

". .திருநன மார்வம மரகத வுருவும
தோளும
தூயதா மரைக்கண் களுமதுவரிதழப்
பவள வாயும
ஆயசீர் முடியும் தேசும்..."

அடியவரான விபரநாராயணரை ஆழங்கால்பட்ட பக்தி வலையில் வீழ்த்தி விட்டன.

அப்போதுமுதல் அப்பெரிய பெரு மாளுககே தம் வாழ்வை அர்ப்பணித் துக்கொணடார். திருவரங்கத் தையே தம வாழ்விடமாக்கிக்கொண டார். அங்கே அழகியதோர் பூந தோட்டத்தினை அமைத்தார். நாளும் மலரும நல்ல மலர்களாகப் பார்த்து பறிப்பாா. தம் கையாலேயே வணண மிக்க மாலைகளாகத் தொடுப்பார். திருத்துழாயாலான மாலையும் திருந தவே கட்டிககொள்வார். அவற்றோடு நேரே எமபெருமாளின திருசசன்ன திககுச் செல்வார். அவற்றை அவ னுக்கு அணிவித்துக் கணடு ஆனந்திப் பார்.

இபபடியே தினமும் நிகழநது வந் ததால அவா நெஞசம் உலகியலை நினைததும் பாராததாயிறறு. எனவே பிரமமச்சரியம என்பது அவரைப் பொறுத்தவரையில் ஒரு விரதமாக அவரால் கைக்கொளளப்படவில்லை. "எம்பெருமானுககுத திருமாலைத் திருத்தொணடியற்றும் ஒரு தொண் டன்" என்ற நினைப்பன்றி வேறெது வும் தம்மிடம் எழாத இயல்பினரான

தால் அவருடன் கூடப்பிறநத பண்பாகவே பிரம்மச்சர்யம் அமைந்திருநதது அதாவது, பிரமமச்சரிய விரதம் அவர் வலிந்து மேறகொணடதல்ல. பகதி வயப்பட்ட அவரிடம இயல்பாகவே அமைநதிருந்தது.

அத்தகைய நல்யடியாருககும பெருஞ்சோதனையாக தேவதேவி என்ற கணிகையின் சநதிப்பு ஒருநாள் நிகழ்நதது. அவள் திருக்கரமபஹுர் என்ற ஊரைச் சேர்நதவள். சோழ வேந்தனை உறையூர் சென்று கணடு தம் ஆடலாலும பாடலாலும அவனைப் பெரிதும் மகிழ்வித்து பெருமபரிசிலை அவனிடமிருந்துபெற்றுததம்முடைய ஊருக்குத் திரும்பிககொணடிருநதாள். வழியில் விப்ரநாராயணருடைய பூநதோட்டத்திலே தம் தமக்கையோடும், தோழிமாரோடும் சற்று இளைப்பாறத் தங்கினாள். அப்போது அங்கே வழக்கம போல் மலர் பறிக்க வேணடி விப்ரநாராயணர் வந்தார். அவருடைய மேனியழகிலே தேவதேவி மதிமயங்கிப் போனாள். அவரும் தம் அழகைக் கண்டுகளிப்பாரென எதிர்பார்த்தாள். ஆனால் அவரோ அவளை ஏறிட்டுப் பார்க்கவில்லை. இப்போக்கு அவளுடைய ஆணவத்தைப பெரிதும தூணடிவிட்டது. தமது தமக்கையை நோககி, "பெணடிரின் அழகை சிறிதும் பொருட்படுத்தாத இவன பேதையோ, அன்றி ஆண்பிறப்பலலனோ?" எனறு வினவினாள். அதற்குச அவளுடைய தமக்கையானவள், "இவர் பெரிய பெருமாளின் சிறந்த பக்தா. ஆணடவனின் அருளழகில ஈடுபட்டுள்ள இவருக்கு நம போன்றோரின் ஊனமிகு உடலழகில் மயக்கம் வராது" என்றாள். உடனே தேவதேவி, "என் அழகால் இவரை ஏமாற்றுவேன்" என்று சூளுரைத்தாள். அதைக்கேட்ட அவளுடைய தமக்கை, "அவ்விதம நீ செய்வாயானால் நான உனக்கு ஆறுமாத காலம் அடிமையாக இருப்பேன்" என்று கூறினாள். தேவதேவியும் தம்முடைய சூளுரைப் பொய்க்குமானால் தம்முடைய தமக்கையிடம் அடிமையாக ஆறுமாதகாலம் பணிபுரிவதாக உறுதி மொழிந்தாள்.

உடனே அவள் தம்முடைய அலஙகார அணிகலனககளைக் கலைந்தாள். எளிய தோற்றத்தினளானாள் தம தமக்கையையும், தோழியரையும சொநத ஊருக்குத்திரும்பிச செல்லப் பணித்தாள். நேரே விப்ரநாராயணரிடம் சென்றாள். ஏழையான தமக்கு வேறு யாரும் புகலளிப்பார் இல்லையென அழுதுரைத்தாள். கணிகையர் குலத்தில் பிறந்த பாவம போதுமென அத்தொழிலில் ஈடுபட மறுத்து தம தாயைத்துறந்து வந்து விட்டதாக மொழிந்தாள். தம்மையும் ஆணடவன பணிக்கு ஆளாக்கி நந்தவனத்தைப் பாதுகாக்கும் பணியில் ஏவல் கொள்ளுமாறு வேணடினாள். விப்ரநாராயணா அவள்பால மனமிரங்கினார். வெளுத்ததெல்லாம பாலென நினைககும் வெள்ளையுள்ளத்தவரான அவர் அவளுடைய வஞ்சக மனத்தினை அறிந்து கொண்டாரில்லை. தம்முடனே அவளையும் தங்கச் செய்து உண்ண உணவளித்து பூந்தோட்டப் பராமரிப்புப் பணியையும் தந்தார்.

ஆரம்ப முதலே விப்ரநாராயணரின் மனஙகோணாதவாறு நடந்து கொள்வதில் தேவதேவி மிகவும கண்ணும் கருத்துமாக இருந்தாள். சிறநத ஒழுககமுடையவள் போல நடித்தாள். பெரிய பெருமாளுக்கான பூமாலை கைங்காயத்தில் அக்கறை கொண்டவள் போல காட்டிக் கொணடாள். இறையன்பன்றி ஏன குணம் சிறிதும் இலலாதவள் போல் தோனறினாள்.

விப்ரநாராயணர் அவளை ஒரு சிறந்த பக்தியுடைய பெணமணி என்றே நம்பிவிட்டார். ஒரு நாள் விப்ரநாராயணர் விதியின் வலிமையால் தம்மை மறநது அவள் மீது மோகம் கொண்டுவிட்டார். அவ்விநாடி வரையிலும் அவருடைய உள்ளத்தில் கோயில் கொண்டிருந்த அரங்கனின அழகுத் திருவுருவம் போன இடம தெரியவில்லை. அங்கே தேவதேவி குடி புகுந்துவிட்டாள்.

அவள் மீதான காமம தலைக்கேறியவராய் பெரியபெருமாளை மறந்து பாவப்படுகுழியில் வீழ்நது விட்ட விப்ரநாராயணர் அவளோடு அதிக நாட்களுக்கு இன்புற்றிருக்க முடியவிலலை. காரணம், தமமுடைய சபதம் நிறைவேறிய மகிழ்ச்சியோடு தேவதேவி அவரைப் பிரிந்து சொந்த ஊருக்குச் சென்று விட்டதால். அவரோ சொல்லொணாபபிரிவுத துயருககு ஆளானவராய் அவளைத்தேடிக் கொணடு அவள் ஊருககே சென்றார். என்னே விதியின் ஆற்றல்! பெரிய பெருமாளின பக்தரான அவர் பொருட்பெணடான தேவதேவியால் உதாசீனபபடுத்தப்பட்டவராய் அவள் வீட்டுத் திணணையில அவளுடைய நல்மொழிக்காக ஏங்கிக் காத்திருப்பவரானார்.

இதைவிட ஒரு பெரிய இழிவு ஒருவருக்கு ஏற்படககூடுமோ? அதிலும் அரங்கன் அடியாருக்கா இந்த கதி? பெரியபிராட்டிக்கே இது பொறுக்க முடியாததாய் இருந்தது. பெரிய பெருமாளை நோக்கி, "தேவரீர் கருணை கூர்ந்து மாயை வயப்பட்ட விப்ரநாராயணரைக் காத்தருள வேண்டும்" என்று வேண்டிக் கொணடாா. அதற்கு அவரும் உடன்பட்டுத் திருவரங்கத் திருக்கோயிலின் திருவாராதனப்பாத்திரமான பொன் வட்டில் ஒன்றுடன் மனிதவுரு தாங்கி தேவதேவியின் வீட்டையடைந்தார். கதவைத் திறக்குமாறு பணித்தார். தேவதேவியே வநது வீட்டின் கதவைத் திறந்தாள். புதியவரைக் கணடு ஒன்றும் புரியாது விழித்தாள். "தாங்கள் யார்? யாது கருதி இங்கு வந்தீர்கள்?" என்று வினவவும் செய்தாள். பன்மாயக் கள்வனான பரமன் "அடியேன பெயர் அழகிய மணவாளன். தங்களின் அனபு வேண்டி இப் பொன்வட்டிலைத் தங்களிடம் தந்து

வருமாறு விப்ரநாராயணரால் ஏவப் பட்ட அவருடைய தோழன்" என்று கூறி அதனை அவளிடம் அளித்தார். அவளும் பொன்னுக்கு மயங்கிய வளாய், "இனி விப்ரநாராயணரை விட்டினுள் விட யாதொரு தடையு மில்லை. அவரை உள்ளே வரச் சொல்லுங்கள்" என்று மொழிந் தாள் அவள் கூறியதை விப்ரநாரா யணரிடம் தெரிவித்து விட்டு தம் திருக்கோயிலுக்குச் சென்று மறைந் தருளினர் பெரிய பெருமாளான அழகிய மணவாளன்.

மறுநாள் காலையில கோயிலிலிருந்த பொன்வட்டில் காணமல் போன செய்தி கோயில் ஆர்ச்சகர்கள் மூலம் உறையூர் சோழ வேந்தனுக்கு எட்டி யது. அவன பொன்வட்டிலைத் திரு டியவன் யாரென விசாரணை செய்ய ஆரம்பித்தான. அப்போது தேவ தேவியின பணிப்பெண ஒருத்தி அங்கே வநதாள. தன் காதலனை ஒருவன் அரசனால் பொனவட்டில் திருடியவனெனற பழிக்காளாவதைக் கண்டு மனம் பொறுதவளாய், தான் அப்பொன் வட்டிலை தேவதேவியின் வீட்டில் கண்டதாகவும, விப்ரநாரா யணரால் வழஙகப்பட்ட அதனை தேவதேவி அவளுடைய தலையணைக் கீழ் வைத்திருப்பதாகவும் கூறினள். உடனே அரசன் தேவதேவியின் வீட்டைச் சோதனையிட ஆணையிட் டான். அச்சோதனையின் போது பணிப்பெண்ணின சொற்படியே பொன்வட்டில் கிடைத்தது. உடனே தேவதேவியும், விப்ரநாராயணரும கைது செய்யப்பட்டு அரசன முன் கொணரப்பட்டனர். தேவதேவி அப்பொன்வட்டிலானது விப்ரநாரா யணரால் அவருடைய தோழரான அழகிய மணவாளன் மூலம் தமக்குத் தரப்பட்டதாகக் கூறினள். விப்ர நாராயணரோ, தமக்கு அழகிய மண வாளன் என்றபெயரில் தோழர் யாரு மில்லை என்றும், தாம் அந்த பொன் வட்டிலைக் கண்டதுமில்லை; யாரிட மும் தந்தனுப்பியதுமில்லை என்று சொன்னர். அரசனுக்கு இருவர் மொழியிலும் நம்பிக்கை பிறக்க வில்லை. எனவே அவனதேவதேவிக்குத் தண்டனையாக அபராதம் விதித்து அததொகையோடு பொன்வட்டிலை யும் பெரியபெருமாள் கோயிலுககு அளிக்குமாறு உத்தரவிட்டான். விப்ர நாராயணருக்குத் தகுந்த தணடனை வழங்கும வரை அவரைக் காவலில வைக்கவும் ஆணையிட்டார்.

இதறகிடையில் பெரியபிராட்டி யார் பெரியபெருமாளை நோக்கி, "அடியவரை மாயையினால் அலைக்கழித்தது போதும், அருள் புரிந்து ஆட்கொள்ள வேணடு கிறேன" என்று கேட்டுக கொண டார். அவரும் அதற்குடன்பட்டு அன்றிரவே அரசனின் கனவில் தோன்றி, "மன்ன, விப்ரநாராயணர் எமக்கு நாளும் மாலை அணிவிதது மகிழும் தொண்டர். அவர் பிழை யேதும் செய்தவரலலர். முன்வினைப் பயன் தீரவே உன்னால் சிறையில் அடைக்கப்பட்டார். எனவே அவரை விடுவித்திடுக. தேவதேவியால செலுத்தப்பட்ட அபராதத்தொகை யினையும அவருக்கே திருப்பித் தந்திடுக" என்று மொழிநதரு ளினர். துயில் நீங்கி எழுநத வேந தன உடனடியாக பெரிய பெருமா ளின் கட்டளையை நிறைவேறறி வைத்தான. சிறையிலிருந்து விடு விக்கப்பட்ட விப்ரநாராயணரின் கால்களில் விழுந்து வணஙகி முறை தவறி நடந்த தமமை மன்னிக்குமாறு வேணடினன். விப்ரநாராயணா நடந்தவற்றுக்கெலலாம் தம தீவி னையே காரணமெனக கூறி அவனுகரு ஆசி வழங்கி தம் பர்ணசாலையைச சென்றடைநதார். முனபோலவே திருமாலைத திருத்தொண்டில முழு மனதுடன் ஈடுபடலானர். தேவ தேவியும் அவருடைய உயர்வினை உணர்ந்தவளாய் தம் சொத்து சுகங் களைத் துறந்து திருக்கோயிலில் தம் மாலான தொண்டுகளைப் புரிந்து வநது முடிவில் இறையருளுக்குப் பாத்திரமானள்.

விப்ரநாராயணா பிறவியிலேயே சிறந்த பகதர். அவருடைய பக்தி யானது இடையில்ஏறபட்ட களங்கத தாலும், அக்களஙக நீக்கத்தாலும மேலும்அதிகமாக வளாநதுவிட்டது. அப்போதுமுதல்திருமாலடியார்களின் திருப்பாதங்களைத் திருத்தமாக கழுவி யபின் அத்தீர்த்தத்தையே பெரும் பேறுகக் கருதி பருகிவநதார. அரங கனடியார்களின் அடிததுகளுக்குத் தாம் தகுதியுடையவரானல் போது மென்று தமமைப் பெரிதும் தாழத் திக் கொணட பெருந்தனமை காரண மாக "தொணடர் அடிப்பொடி" என்ற சிறப்புப் பெயருககு உரியவ ரானர். திருவரங்கனின திருத் தொணடிலேயே ஈடுபட்டிருந்து இறு தியில அவனில் ஐக்கியமானர்.

தொணடரடிப் பொடியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் ஒரே காலத தினா. தொணடரடிப்பொடியாழ வார் தம்முடைய பூ கொய்யும கரு விக்கு 'அருள்மாரி' என்று திருமங் கையாழ்வாரின் திருப்பெயரை இட்டு வழங்கியதாகக் கூறப்படுகிறது. திரு மங்கையாழ்வாரும் அவரிடத்தே பெரிதும மதிப்புடையவராய் அவரு டைய நந்தவனத்திற்கு எந்தவிதக் குறைவும் வராதவணணம இடம விட்டு திருமதிள எழுப்பியதாக வழங்கப்படுகிறது. மாமுனிகளின உபதேச ரத்தினமாலை, "அன்பா தாள்தூளி நற்பாணன் நற்கலியன்" எனறுரைப்பது கொணடு மூவருமே ஏக காலத்தினரெனபதை உய்த்துண ரலாம்.

தொணடரடிப பொடியாழ்வார 'திருமாலை' 'திருப்பள்ளியெழுச்சி' என்ற இரு திவயப்ரபந்தஙகளை அரு ளிச் செயதுளளார. இரணடுமே தனிச்சிறப்புடையவை.

அவர் பெரியபெருமாளுக்குத் துளசிகொண்டு மாலை கட்டி யணி வித்து மகிழ்ந்தது போலவே, செந்

(29-ம் பக்கம் பார்க்க)



# சபரிமலை யாத்திரை

திரு. சந்திர மௌளீஸ்வாமி
திருப்பதி

**ஸ்ரீ** கனனிமூல கணபதியும, மஞச லோக யாதாவும சகல பரிவார தேவதைகளும புடைசூழ, முகதி மாரககத்திறகு வழிகோலும தத்துவப பதினெணபடி மேல் ஸ்ரீதர்ம சாஸதா "அய்யப்பன" என்ற பெயரில் யோக நிஷடையில் அமாநதிருககும் சபரிமலை பாரத புணணிய பூமியின மிகசசிறநத புணணியத திருத்தலஙகளில் குறிப்பிடததகக ஒன்ருகும்.

இப்பரநத பூவுலகிலேயே பகதி உணாவு தழைததோங்கி நிற்கும ஞான பூமியாகிய நம பாரதப பெருநாட்டில் உலக மாயை அகல, உளளம தெளிவாக, பற்றறற பரநத மனப்பானமை அடைய தியாகச் சிந்தையுடன் பக்தர் வெள்ளம் பயபக்தி விச்வாச ஆசார அநுஷ்டானங்களுடன் மாலை அணிந்து மண்டல காலம் அதாவது நாற்பத்தியொரு நாட்கள் பிரம்மசர்ய விரதம் பூண்டு இருமுடி சுமந்து, அய்யனைக் காண கொடிய விலங்குகள் உலவும் பெரும் கானகத்தினூடே பக்தியுடனும், பக்தி பரவசத்துடனும் பயணம் தொடர்கின்ற புனித யாத்திரை "சபரிமலை யாத்திரை" என்பதனை நாடறியும்.

அழகு கொஞ்சும் கேரள மலைத் தொடரின் நடுமையமாய் அமைந்துள்ள இத்திருக்கோவில் ஸாக்ஷாத் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் அவதாரமாகிய பரசுராமரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்று கூறுகின்றனர். இக்கோவிலில் உறையும தேவன் ஸ்ரீ அய்யப்பன். இவர் பல காலங்களுக்கு முன்பிருந்தே 'ஹரிஹரஸுதன்' 'ப்ராய குப்தன்', 'ஆரியதாதா', 'கருப்பஸ்வாமி', 'ஆர்யப்பன்', 'முனிச்வரன்', 'சங்கிலிக்கருப்பன்' 'முனியாண்டி', 'மன்னார்சாமி,, 'குருநாதப்பர்', 'முக்தீச்வரநாத்' என்ற பல நாமங்களில் நமது முன்னோர்களால் வழிபட்டுவந்தவரே. உலகத்தில் தீமையை ஒழித்து தர்மத்தை நிலைநாட்ட அவதரித்தஇவர் புராணங்களில் 'தர்மசாஸ்தா' என்றே குறிப்பிடப்பட்டுள்ளார்.

இவர் ஸர்வ தேவதாஸ்வரூபமானவா. பிறவியே இவருக்கு ஹரிஹராம்சம். பிறகு மஹாபராக்ரமசாலியும், பல வரங்களைத் தனது தவ வலிமையால பெற்று, அமரர்களுக்கு இன்னல் பல செய்து அவர்களின் சிம்ம சொப்பனமாய் விளங்கிய கரம்பிகை என்ற மஹிஷி முகம் கொண்ட அரக்கியை வதம்செய்யும் பொருட்டு தேவர்கள் அனைவரும் தத்தமது அம்ச பலத்தை இவருக்கு அளித்தனர். மஹிஷி ஸம்ஹாரம் முடிந்து சாநதமடைந்த இவர் உலக மக்களை உய்விக்கும் பொருட்டு யோகாசன மூர்த்தியாய் சின முத்திரையோடு ஸ்ரீசபரிமலை அருட்சிகரத்தில் எழுந்தருளி மானிடர் மேம்படும வழிகளை அருளியுள்ளார்.

மாலைஅணிந்த நாள் முதல் பிரம்ம சர்யம் காத்தல், ஸத்வ குணத்தை வளர்க்கும் காய்கனி வகைகளை உண்ணல, ரஜோகுணத்தை வளர்க்கும் மதுமாம்சாதிகளைக் கைவிடல், தினமும் இருமுறை குளிர்ந்த நீராடி தேஹஸுத்தி செய்து கொள்ளல், சீரான கால அளவுள்ள உறக்கம், மலையாத்திரையில்காட்டிலும்மேட்டிலும் ஏறி இறங்கும் போது உண்டாகும் துரித ஸ்வாஸ நிஸ்வாஸத்தால் நரம்புமணடலம் சுத்தமாக்கப்படுதல், தொடர்நத நடையால் உடலில வியர்வை பெருகி அதன் மூலம் சரீரத்திலுள்ள துர்நீர் வெளிப்போதல், யாத்திரையின் இடையில்ஆங்காஙகே வனமூலிகைகளின் ஸத்துடன பிரவஹிக்கும நதிகளில் நீராடுவதால்சாம வியாதி போன்றவை நீங்குதல் முதலிய உடல் நலனும, ஆலயம் செல்லுதல், இறைவழிபாடு, ஆன்ருேர் தரிசனம், நன்மொழி கேட்டல், பெரியோர் ஆசி, நன்நடத்தை, பூஜை, பஜனை, ஆராதனை, அன்னதானம, புறங்கூருமை, உண்மை வழுவாமை ஓர்இனக்கொள்கை, கணணியம் தவருமை, கடமை மறவாமை, தெய்வப் பற்று போன்றவற்ருல உள்ள மேம் பாட்டையும் ஒருங்கே அடைகின் ருன் அய்யப்ப பக்தன.

பதினெட்டு தேவதைகளைப் படிகளாய்க் கொண்ட ஞானசிம்மாசனத்தில், யோக பட்டதாரியாய் கொலுவீற்றிருக்கும் சபரிமலைக கோவில் வாயிலில் சத்தியமும்தர்மமும் காவல் தெய்வஙகளாயத திகழ்கின்றன. ஆகையால அந்த மாபெரும் சக்தி வாய்ந்தத் தெய்வத்தை தரிசிப்பதற்குக்காடுமலை பலகடநது கொடிய மிருகங்கள் சுறறித்திரியும கடின பாதைகளை கடந்து, பல இன்னல்களை எதிர்கொள்ள வேண்டியிருப்பதால் சபரிமலை யாத்திரை மேறகொள்ளும பக்தர்கள் நமது முனனேர் ஏற்படுததிக் கொண்டு நடந்த வழியை வழுவாமல் கட்டுப்பாட்டுடனும், தெய்வ பக்தியுடனும் விரதானுஷ்டானங்



பம்பா நதி

களைக் கடைபிடித்து, 'ஸ்வாமியே சரணம் அய்யப்பா' என்ற நாம ஜபத்தை இடைவிடாது தியானித்து வந்தால் ஒவ்வொரு அய்யப்ப பக்தனிடமும் ஒரு திவ்ய சக்தி தோன்றி அருள் புரிந்து வழிகாட்டும. அந்த ஆன்ம சக்தியை ஞான ஜோதியை வழித் துணையாகக் கொண்டு, எதிர்படும் இனனல்கள் என்ற இருளைக் கொய்து இலக்கை அடைய — அருட்பெருஞ் ஜோதியில் ஸங்கமிக்க வழிகாட்டுவதே சபரிமலை யாத்திரை.

உலகியல் வாழ்வில் ஈடுபட்டு நாம் நாள்தோறும் அறிநதும் அறியாமலும் பல பாவச்செயல்களைச செய்கினருேம். மானிடனுயப் பிறநதும் 'செவியிற சுவையுணரு வாயுணர்வின் மாக்கள்' என்ற உவமைக கொப்ப வனவிலங்கினும் கொடிய பிறவியைப் போன்று காழ்ப்புணர்வுடன் வாழ்ந்து வருகினருேம். நிலையற்ற சிற்றின்ப சுகங்களை நாடி வெறுமஆசாபாசங்களுக்கு அடிமையாகி, அலைந்து திரிந்து வாழ்நாளை வெறுநாளாக்கிக் கொண்டிருக்கினருேம்.

பிறவி முதல் முன்வாசனையை அனுசரித்து இயல்பாகவே மனிதனுக்கு ராகத்வேஷாதிகள் என்ற தீய குணங்கள் காணப்படும். இத்தீய குணங்கள் முறையே காமக்ரோதாதிகள் என பதினெட்டு நிலைகளைக் கொண்டதாகும். முற்பிறவியின் பலனுடன் இப்பிறவிலும் தொடர்ந்து பாவச் செயல்களில் ஈடுபட்டுத் தாங் கொணுப் பாவச்சுமையை சுமநது நிறகும மானிடரைக் கரையேற்ற தத்துவப் படிகளைக கடநது முக்திப் பெருவழியைக் காட்டுகிருன் ஐயனும் அப்பனுமான அய்யப்பன். பிறவிப் பெரும் பயனை அடைந்து நிலைத்து வாழும முமுக்ஷுக்கள் (மேம்பட்டவர்கள) பெற்றிருககும் சித்திகள் பதினெட்டு. அவை .....

" அணிமா—லஹிமா—மஹிமா— ஈசத்திவ—வசித்வ — ப்ராகாம்ய — புத்தி — இச்சா—ப்ராப்தி — ஸர்வகாம—ஸர்வஸமபத்பரத — ஸர்வப்ரியங்கர ஸாவ மங்கள காரண — ஸர்வதுக்கவிமோசன—ஸர்வம் ருத்யு ப்ரசமன — ஸர்வவிக்ன நிவாரண— ஸர்வாங்கஸுந்தர—ஸர்வஸௌபாக்யதாயக" என்பனவாகும.

மேற்படி ஸித்திகள் பெறறு மிகுதியுள்ள வாழ்நாளை பயனுள்ளதாய் இறை நினைவாகவே கழித்து முக்தி

அடையும மேம்பட்டவர்களுக்கு இனிப்பிறவி உணடாகாது. பிறவி இன்றேல் மரணமும் இல்லை அல்லவா? அப்படி மனிதர்களை கடைதேற்றவல்லது இந்த சபரிமலை யாத்திரை. முனிவர்கள் மாதவம்புரிந்து உடலை வருத்திப் பெறும் இந்த சிததிகள் அனைத்தையும் தன்னை நாடி வரும் பக்தர்களுக்குப் பதினெட்டு படிகளின தத்துவ போதனை மூலம் வழங்குகின்றுன ஐயன அய்யப்பன.

மானிடராய்ப் பிறந்த ஒவ்வொருவரிடமும பயபக்தியுடன் இருமுடி சுமந்து நோன்புடன் அநத பதினெட்டாம்படி கடக்கும் தோறும் ஒவவொன்ருக விலகி, ஒவ்வொரு ஸித்தியாக மிகுநது முடிவில 18வது வருடமலை ஏறுபவர் மேம்பட்ட நிலையை அடைந்து முமுக்ஷுக்களாய் இனபுறுவர் எனத திண்ணமாக நம்பப்படுகின்றது. இநத புனிதமான படிகளைக் கடப்பதற்கு என்னவழி என்று பகவானே பகர்நதிருக்கின்ருா.

### பகவான அருள்வாக்கு

பற்றற்ற கருமம் செய்வோமாஞல் மனம மாசுபெருது. தூயமனதில் ஞானமமிளிரும். ஞானமஎனறநெருப்பில் காமகரோதாதிகள என்ற அஞ்ஞான கருமங்கள பஞ்சுபோலஎரிநதுபோம். ஞானம் பெற இறை வழிபாடு மூலப பொருளாகினறது. பிரமமசாயம ஓஜஸ்ஸைத தருகினறது. சரண கோஷம அதறகு வழிகாட்டியாகினறது. மனதை ஒரு நிலைப்படுத்தி தியானம் செயயும போது அமமன தில சாநதியும பேரினபமும் உணடாகும. கடவுளிடம் சரஞுகதி அடைந்தே பக்தியின் அடிப்படையாகும"

'சரணம் அய்யப்பா' எனற சரஞுகதி மந்திரத்தை தூய மனத்துடன ஓதி பதினெட்டுப் படிகளைக் கடநது ஸ்ரீ தர்ம சாஸ்தாவை தரிசிப்பவா வாழ்வில் சகல நலனகளையும பெற்று முடிவில் முகதி பெறுவர் எனபது கருதது.

இத்தனை சக்தி வாய்ந்த நலன்கள் பயக்கும் சபரிமலை யாத்திரையின் மஹிமைதனை உணர்ந்து, எதிர்படும் இன்னல்களையும் பொருட்படுத்தாது ஆண்டுதோறும் எழுச்சியுடன மேற்கொள்ளும் பக்தர் குழாம் ஆணடுக்கு ஆணடு பல்கிப் பெருகி பரந்து விரிந்து கூட்டங்கூட்டமாய்ச் சபரிமலையில் கூடி ஐயனைக் கணடு களித்து, ஆனம சுகம் பெற்று நாட்டின நல் மனிதமணிகளாய் மனை திரும்புகின்றனர். இனறு தமிழகத்தினர் மட்டுமின்றி ஆந்திரம், கர்நாடகம் மற்றும் வடநாட்டிலிருநதும் பக்தர்கள் சபரிமலைக்குப் பயணமாகினறனர். அங்கு (சபரிமலையில்)ஒரு முறை அவனை தரிசனம் கணடவா தொடர்நது வரத் தவறுவதே இல்லை.

இந்த யாத்திரைக்கு மாலை அணிய கார்த்திகை முதல நாள் உரிய நாளாக எண்ணப்படுகின்றது. மாலை அணிய எண்ணியவர்கள் தாய் தந்தையரின் நல்லாசியுடனும் இல்லாளின் அனுமதியுடனும மாலை அணிந்து விரதம் மேற்கொள்ள வேண்டும்.

கேரளநாட்டில் ஸஹயாத்ரி மலைத் தொடரின் ஒரு பகுதியாக அடர்ந்த காட்டின் நடுவில் புராணப் பிரசித்தமான இந்த சபரிமலை காணப்படுகின்றது. கொடிய வனவிலங்குகள் மிகுநது திரியும் இந்தக் காட்டுக் கோயிலை அடைய கால்நடை மார்க்கம் மட்டுமே உள்ளதால் கூட்டங் கூட்டமாக யாத்திரை மேற்கொள்ளும் பழக்கத்தை நமதான்ருேர் ஏற்படுத்தியுள்ளனர். அப்படிக் கூட்டமாக இயங்கும் ஒவ்வொரு கூட்டத்தையும இயக்கிச் செல்லும் தலைவனை 'குருசாமி' எனறு மிகுந்த பயபக்தியுடன் அழைத்து அவர் சொற்படி நடந்து யாதநிரையை ஆனந்தமயமாக்கிககொள்வர். அத்தகைய குருசாமிகளுககு எனறு தனித்தகுதிகள் உணடு.

ஆழ்ந்த கடவுள பகதி, நன்னெறி முறைகளுடன கூடிய வாழ்க்கை முறை, நல்லோர் நட்பு, தயை, சாந்தம், அறிவு, பண்பு, சமநோக்கு முதலிய நறகுணங்கள் அமையப்பெற்ற வருமான ஒரு உத்தம புருஷனை குருவாக ஏறறுக்கொள்ள வேணடும். அவர் பலமுறை சபரிமலை யாததிரை சென்று வந்த பணபட்டவராக இருத்தல் வேண்டும். தன்னிடம் வரும் சீடாகளின மனச்சஞ்சலத்தை நீக்கி



கனனிமூல கணபதி கோயில்

## ஓர் அறிவிப்பு

திருமலைக்குச் செல்வதற்கு முன் அல்லது திருப்பதிக்குத திரும்பிய வுடன் யாத்திரிகர்களுக்குக் குறைந்த வாடகைக்கட்டணத்தில், எல்லா வசதிகளுடன் கூடிய தங்குவசதி கிடைத்திடும் வகையில் அண்மையில் திருப்பதி அலிபிரியில் தி.தி. தேவஸ்தானம் விருந்தினர் விடுதி ஒன்றினைத் திறந்துள்ளது. ஊர்திகளை நிறுத்துவதற்காக பரந்த இடவசதிகளைக் கொண்டு உணவு விடுதி ஒன்றும் இக்ககட்டிட வளாகத்தில் செயல்பட்டு வருகின்றது. நாள் ஒன்றிற்கு அறை ஒன்றிற்கான வாடகை ரூ. 30/-ஆகும்.

தங்கு வசதி வேண்டுவோர் அதற்குரியத் தொகையினை 10 நாட்களுக்கு முன்கூட்டியே உதவி செயலாட்சித் தலைவர், வரவேற்பு, தி. தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் முகவரிக்கு அனுப்பி ஆங்கிலத்தில் தகுந்த விவரங்களுடன் கூடிய கடிதத்துடன் தொடர்பு கொள்ள வேண்டும்.

நற்போதனைகளால் ஆன்ம ஞானம் அருளவல்லவராகவும் இருத்தல் வேண்டும். அப்பேர்ப்பட்ட உத்தம குரு கிடைக்கப்பட்டவர்களை மிகுந்த பாக்கியசாலிகள் என்றே கூறலாம்.

நாம் அழுககு உடையவர்களாக இருக்கின்றோம். சஞ்சலம் உடையவர்களாக இருக்கின்றோம். மனதை ஒரு நிமிடம கூட ஓர் இடத்தில் நிலைநிறுத்த முடியாதவர்களாகஇருக்கின்றோம். எப்போதும் சுத்தமாக அப்பழுக்கற்றவனுக, நிரம்பியஞானம் உடையவனுக, அசங்காமல்,ஆடாமல் பட்ட கட்டை மாதிரியாக இருக்கின்றவரை முழுமனதாக நாம் நினைத்தால்தான் நாம் நினைக்கின்ற அவரது நிச்சலமான நிலை நமக்கு வரும். நாம் பக்தி செய்வதால் அந்த ஈசுவரனுக்கோ இந்த குருவுக்கோ ஒரு லாபமும் இல்லை. நமக்கேதான் அநேக லாபங்கள்.

அவை என்னவென்ருல்...ஸத்குருவின் மூலம் வித்தை போதிக்கப்பட்டு, அதன் மூலம் ஞானம் பெற்று பரமனின் அடிசேர வழி உண்டாகும். அப்படி உயர்ந்த ஞானம் பெற நமது குருவிடம் நாம் அபார நம்பிக்கை கொள்ளவேண்டும். அவரிடம் அசஞ்சலமான பக்தி ச்ரத்தா விச்வாசத்துடன் வித்யை கற்பவர்கள் பார் புகழும் ஞானிகளாகத் திகழுவர்.

இந்தப் புனித யாத்திரையை மேற்கொள்ள விரும்புவோர் கார்த்திகை முதல் நாள் மாலை அணிந்து கொள்வது உத்தமம். அன்றைய தினம் என்ன திதி, வாரநக்ஷத்திரமாக இருந்தாலும் உசிதமே. அன்று தவறினுல் பிறகு நல்ல நாள் நட்சத்திரம் பார்த்து, 40 நாட்களுக்குக் குறையாமல் நாட்களைக் கணக்கிட்டு மாலை அணிந்து கொள்வது மத்யமம். அதற்குக் குறைவாகவோ அல்லது யாத்திரை புறப்படும் தினமோ மாலை அணிவதென்பது அதமம். இது வரவேற்கத்தகுந்ததல்ல. அதற்குபதில் இவர்கள் மாலை அணியாமலேயே பின்புற படிகள் வழிச்சென்று அய்யப்பனைத் தரிசித்து வரலாம். இதனுல் புண்ணியம் கூடுவதோடல்லாமல் அடுத்த வருடம் மாலை அணியும் வாய்ப்பும் கிடைக்கும். பெரு மதிப்பிற்குரிய குருஸ்வாமிமார்கள் இவ்விஷயத்தை மனதிற் கொண்டு 'நாற்பது நாட்களுககுக் குறைவாக விரதம் மேற்கொள்ளுபவர்களுக்கு மாலை இடுவதில்லை' என்ற உறுதிடனும் கட்டுப்பாட்டுடனும் இருந்தால் உண்மையான சபரிமலை யாத்திரையின முழுப்பயனையும் அடையும் வாய்ப்பு அனேகம் கன்னி ஸ்வாமிகளுக்குக் கிடைக்கும் என்பது அடியேனுடைய தாழ்மையான கருத்து.

இந்த யாத்திரையின் முக்கிய போதனையே உலகில் உள்ள மக்கள் அனைவருமே ஓர் குலம்! இறைவன் அனைவருக்கும் பொதுமானவனே! அவனது சன்னதியில் ஸர்வ மதஸங்கமும் இருக்கும் என்பதே. அதுவே ஜீவாத்ம பரமாத்ம ஸங்கமம்.

கலியின் மாயையில் சிக்கித் திணறி மீள வழிதெரியாமல் வேதனைப்பட்டு ஓலமிடும் ஒவ்வொருவரும் தமது வாழ்வில் ஒரு முறையேனும் கைக்கொள்ள வேண்டிய ஒப்புயர்வற்ற யாத்திரை இந்த சபரிமலை யாத்திரை என்பது மிகையாது. உடல் உறுதி பெற உள்ளம் தூய்மை அடைய உற்ற துணையாய் அமைகின்றது இந்த சபரிமலை யாத்திரை.

கலிதோஷமகற்றவல்ல இந்த தெய்வத்தினை ஆராதிக்கவும், சபரி பீடம் சென்று வழிபடவும் சிலவழிமுறைகளையும் சில விரதானுஷ்டானங்களையும் ஏற்படுத்திக் கொண்டு வணங்கி வழிபட வேண்டும் என நமதான்றோர் பகர்ந்துள்ளனர். கற்ருேர்க்கு அழகு ஆன்றோர் சொல் கேட்டலன்றே? ஆகையால் மண்டல காலம் நன்நெறியுடன் ஒரே பரம்பொருளின் நினைவாக அந்த ஒன்றையே எண்ணி எண்ணி மனப்பக்குவமான மனிதன தன் இலட்சியத்தை-இலக்கை அடையும் போது இறை அருள் அவனிடம் உள்ள மாசு மருவையெல்லாம் நீக்கிப் புனிதனுக்கி மிளிரச் செய்கின்றது.

ஹரிஹர சுதனுன ஸ்ரீ அய்யப்ப தெய்வத்தினை தரிசிப்பதற்குத் தன் உடலை தேவாலயமாக்கி மாலை என்ற முத்திரை மூலமாக ஆவாஹனம் செய்துக்கொண்டு விரதமேற்று ஸதா அவனது சரண நாம ஜபத்தில் திளைத்து, உள்ளும் புறமும் தூய்மையாக்கிக் கொண்டு இருமுடி சுமந்து பெருவழி கடந்து, இறைவனடி முன் உள்ள பதினெண்படி கடந்தே பரமனைக் காணவேண்டும் என வரையறுக்கப்பட்டுள்ளது.

பயபக்தி, விச்வாஸ,ஆசார, அனுஷ்டான நியமங்களுடன் ஆன்றோர் வகுத்துக் கொடுத்த வழிதனைப் பின்பற்றி நடந்து, ஆண்டுதோறும் அவனைக் கண்டு அவன் அருளால் உலகோர் அனைவரும் ஸகல நலன்களும் பெற்று இனிது வாழக்க ..வது.



# திருமங்கையாழ்வார்



எல்லையில்லா இன்ப வடிவான வைகுந்தத்தில் திருமகள் கேள்வனான சர்வேஸ்வரன கொலு வீற்றிருக கிறான. குற்றங்குறையறற ஞான முடைய நித்திய சூரிகள் அவனுககுத் தொண்டு புரிநது நிலையான இன்ப மடைகிறார்கள். இவ்வாறு தன்னை யநுபவிக்கச சம்பந்தம இருநதும் ஞான சூனியர்களாய இம்மானிடர் கள் துன்பத்தில் உழலுகிறார்கள். இவர்களையும உய்விக்க வேணும் என் னும் நசையாலே ஆழ்வார்களைத் தோற்றுவித்து ஞானத்தை யூட்டச் செய்கிறான். இவ்வாறு ‘சார்ஙகம்’ என்றும் தன் வில்லின் அம்சமாய்த் தோன்றியவர் திருமஙகையாழ்வார்.

‘சோழ வள நாடு சோறுடைத்து’ என்னும பெருமைககுரிய சோழ மண் டலததின் குறுநிலமாயிருந்தது திரு மங்கை எனனும் நாடு. அங்குத் திரு வாலி திருநகரி என்னும் திவயதேசங் களுக்கருகாமையில் திருக்குறையலூர் என்னும் திருத்தலமதனில் சோழ மன்னனின் சேனாதிபதியாகத் திகழ்ந்த கள்ளர்குடிப் பெரியார் ஒருவர் வாழந்து வந்தார். அப்பெரியாருக்குக் கார்ததிகை மாதம் கார்த்திகை நக்ஷத்திரத்தில் செல்வக்குமரனாய் அவதரித்தார். பிறக்கும் பொழுதே கருமை நிறத்தவராயிருந்ததால் செல்லமாக ‘நீலன்’ எனறு அழைக்கப் பெற்றார். இளமையிலேயே யுத்தப் பயிற்சிகளில் தேர்ச்சியுற்ற இவர் தகப்பனாரைப் போலவே சோழ மன் னனின் சேனாதிபதியாகத் திகழ்ந்தார். “கடம் சூரும கருங்களிறு வல்லான் வெல்போர்” எனப் பெருமையுறும் வண்ணம், போரில் மதம் பிடித்த பெரிய யானையாயினும் அதனையும் அடக்கி வெற்றி வாகை சூடும் இவர், யுத்த களத்தில் முன்னணியில் நிற் பதைக காணும்தோறும் யமனைக் கண்டது போலவே அச்சம் கொள்ளு வர் எதிரிகள். ஆகவே இவர் ‘பர காலன்’ என அழைக்கப் பெற்றார். போரிலே வெற்றி வாகையே சூடி வரும் இவரைப் போற்றும் முகமாய், இவரை திருமங்கை நாட்டிற்கு குறு நில மன்னனக்கி மகிழ்ந்தான் சோழ மன்னன்.

---

திரு. வெ. இராகவன்,
பள்ளத்தூர்.

---

அண்ணன் கோவில் எனும் திரு வெள்ளக்குளத்தில் தாமரைத் தடாகமதில் தேவலோகத்துக் கன்னி யர் ‘ராசக்கிரீடை’ செய்து போவது வழக்கம். ஒரு தினம் அவர்களில் திருமாமகள் எனபாள் மட்டும் மானி டவுருக் கொண்டு இங்கு தங்கிவிட் டாள். அதுட்டானத்திற்காக அங்கு வந்த வைத்தியனான வைணவனொரு வன் தனியே நிறகும இவளைத் தன் இல்லததிறகு அழைத்துச் சென்றான். குமுத மலர் கொய்து கொண்டிருந் தமையால் இவளைக் ‘குமுதவல்லி’ எனப பெயரிட்டு வளர்த்து வநதான் பருவமடைநத இவளுக்கு ஏற்ற மணாளனைத தேட வேண்டிய கவலை யும் இவனுக்கு உண்டாயிற்று.

இவளது அழகையும குணத்தையும் கேள்வியுறற திருமங்கை மன்னன் இவளைத் தனக்கு மண முடித்துத் தரு மாறு அவ்வைணவனை வேண்டுகிறான்

குமுதவல்லியின் விருப்பத்திற்கிணங்
கத் தானும் பஞ்ச சம்ஸ்காரங்களை
யும் பெற்றுக் கொண்டு ஓர் வைண
வனுய் ஓராண்டு காலம் ஆயிரத்
தெட்டு ஸ்ரீ வைஷ்ணவாகளுக்கு 'ததி
யாராதனம்' செய்வித்துப் பின்னர்
அவளை மணந்து கொணடார். 'பகவ
தாராதனத்திற்காட்டிலும் பாகவ
தாராதனமே சிறநதது' என்பதனை
நன்குணர்ந்தார். அரசனுக்குச்
செலுத்த வேணடிய திறைப்பணமும்
இவ்வாராதனத்திலேயே செலவழிந
தது. திறை செலுத்தப் பணமில்
லாத நிலையில் திறை கேட்டு வந்த
சோழனின் சேவகர்களையும், சீறி
விழுந்து வெருட்டி ஓட்டினுர். இத்
தால் சீற்றம் கொணட சோழன்
இவரைப் பிடிதது வரும்படி சேனைத்
தலைவனையனுப்பினுன். இவனையும்
இவன்கூட வந்த சேனையையும் புற
முதுகு காட்டி ஓடும்படிச் செய்தார்
திருமங்கை மன்னன். இம்முறை
அரசனே பெருஞ்சேனையோடு வந்து
இவரைப் பிடிக்க முயன்ருன். 'ஆடல்
மா' என்னும் தன் குதிரை மீதேறி
எதிர்த்த இவரைப் பிடிப்பது என்பது
அவ்வளவு சுலபமல்ல என்பதை
அரசன் உணர்ந்தான். ஆகவே இவர்
வீரத்தைப் பாராட்டுபவன்போல்
பாசாங்கு செய்து இவரை அருகி
லழைததுத் தநதிரமாகக கைது
செய்து ஓர் தேவாலயத்தில சிறை
வைத்தான. தனக்குச் சேர வேண்
டிய திறையைச் செலுத்திப் பின்
விடுதலை பெறறுச் செல்லும் எனச்
சூளுரைத்துச் சென்ருன்

மூனறு தினங்கள் பட்டினியால்
வாடி மயங்கிக் கிடககும் இவர் கன
வில் வரதராஜப் பெருமாள் தோனறி,
'காஞ்சிக்கு வந்தால் பொருள் தரு
கிறேம்' எனச் சொல்லி மறைந்
தனன சோழனின் மந்திரியோடு
சென்ற பரகாலர் எங்குத் தேடியும்
பொருள் கிடைக்காது வருந்தி மீண்
டும் மயங்கிக கிடந்தார். வரத
ராஜனே இவர் கனவில் தோன்றி
வேகவதிக் கரையில் நிதியுள்ளவிடத்
தைக் காட்ட இவரும் அவ்விடம்
சென்று நிதியினைக் கணடெடுத்தார்.
திறை செலுத்திப் பின் மிகுந்ததை
யும் ததியாராதனத்திலேயே செல
விட்டார். நடந்தவற்றையெல்லாம்
அறிந்த மன்னன் தன் தவறுக்கு
வருந்தித் தன்னைமன்னித் தருளுமாறு
பரகாலரை அடிபணிந்து வேண்டி
னுன். திறைப் பொருளத்தனையை
யும் ததியாராதனத்திற்கே உப
யோகித்துக கொள்ளுமாறு இவ
ரிடமே சேர்ப்பித்துவிட்டான்.

தனக்கென வாழும் தன்மை நீங்கி
அடியார்களுக்கென வாழும் உன்னத
நிலையையடைந்த இவர் பொருளத்
தனையையும் பாகவத ஆராதனத்தி
லேயே செலவிட்டார். இவ்வாரா
தனம் தொடர்ந்து செவவனே நடை
பெற வேண்டி தீய வழிகளிலும்
பொருளீட்டவும் முனைந்தார். இவ
ரைத் திருத்திப் பணிகொள்ளத் திரு
வுள்ளம் கொண்ட எம்பெருமான்
பெரிய பிராட்டியும் தானுமாய்
அந்தணவுருவில் புதுமணத்தம்பதி
யர்போல் உயர்ந்த ஆடை ஆபரணங்
களணிந்து கொண்டு இவர் பதுங்கி
யிருக்கும் இடம் நோக்கி வந்தார்.
திருமணக் கொல்லையில் ஓர் அரச
மரத்தினடியில் பதுங்கியிருக்கும்
இவர் குபீரெனப் பாய்ந்து அவர்
களிருவரும் அணிந்து கொண்டிருக்
கும ஆடை ஆபரணங்களையெல்லாம்
பறித்துக கொண்டார. காலில்
கிடந்த கணையாழியைக் கழற்ற முடி
யாது அதனையும் பல்லால் கடித்துக்
கவர்நது கொண்டார. இம்மிடுக்
கினைக் கண்ணுற்ற அந்தணர் 'நீர்
எனன கலியனே?' (பல சாலியோ?)
எனக கேட்டார். இது முதல் இவர்
'கலியன' என அழைக்கப் பெற்ருர்.
கவர்ந்த பொருளத்தனையையும்
மூட்டையாகக் கட்டித் தூக்க
முயற்சிக்கையில் 'திண்டிறல் தோள்
கலியன்' எனத் தோள் வலிமைக்குக்
கட்டியம் கூறிக்கொள்ளும் தன்னு
லும் அசைக்கக்கூட முடியாது திகைக்
கிருர். 'நீர் என்ன மந்திரம் செய்
தீர்?' எனத்தன் உடை வாளையுருவ்
அச்சுறுத்திக் கேட்டார். அவ்வந்
தணரோ 'அருகில் வா; அம்மந்திரத்
தைச் சொல்லுகிறேன்' என அழைக்க
அவருமி அருகில் சென்ருர்.

"திருமணம கொல்லை தனனில் வழி
பறித்தகுறற மற்ற செய்கையான்
மறையுரைத்த மந்திரத்தை மாலு
ரைக்கவவன்முனே மடியொதுக்கி
மனமடக்கி வாய் புதைத்து"

(மணவாள மாமுனிகள் தனிப்பாடல)
என ஆடையை நன்கு ஒதுக்கிக் கை
கட்டி வாய் புதைத்து மனத்தை ஓர்
நிலைப்படுத்தி அனைத்து வேதங்களின்
சாரமான எட்டெழுத்தையுடைய
திருமந்திரத்தைத் திருமால் உப
தேசிக்கத தான செவி சாய்த்துக் கேட்
டார். இத்தோடன்றி கருடாரூட
னுய்த் தோன்றித் தன் திவ்விய மங்
கள விக்ரஹத்தையும் கண்டானந்திக்
குமபடி செய்தான. கலியன் அவ
தரித்த திவ்விய தேசத்தின பெருமை,

"ஈதோ திருவரசு! ஈதோ மணங்
கொல்லை!
ஈதோ எழிலாலி என்னுமூர்! ஈதோ
தான்
வெட்டுங்கலியன் வேல்காட்டி நெடு
மாலை
எட்டெழுத்தும் பெற்ற இடம்"

(மாமுனிகள் தனிப்பாடல்) என
அங்குச் சென்று சேவித்த மாமுனி
களின் திருவாக்கினின்றும் மலர்நத
இப்பாசுரத்தால் பிரகாசிக்கிறது.

" தனே மலரும் திருப்பாதம்" என
அவன் திருவடிகளிலே வாய் வைத்த
கலியனுக்கு பத்ரிகாசரமத்திலே நர
நாரணனுகத் தோன்றித் தனக்குத்
தானே உபதேசித்துக் கொண்ட குறை
தீர, லக்ஷ்மீ நாதனுன தானே திருமந்
திரததை உபதேசித்தான். தன் திவ்
விய மங்கள விகரஹததையும் தானே
காட்டக் கண்ட கலியன் அஞ்ஞான
இருள் நீங்கப் பெற்று மயர்வற மதி
நலமருளப் பெற்றவரானுர். அதனுல்
அவர் நாவினின்றும் மலர்ந்தது

அமுதப் பாசுரங்கள்! தன்னை யாட் கொண்ட திருமந்திரத்தின் பெருமை "நான் கண்டு கொண்டேன் நாராயணு வென்னும் நாமம்" என்னும் பாசுர மாய்ப் பரிணமித்தது. திருப்பிரிதியை யும் வதரியாச்ரமத்தையும் காட்டக் கண்டு திருமொழிகளாலே மங்களா சாஸ௱ம் செய்தார். மேலும் பல தேசத்து எம்பெருமான்களையும் கண்டானந்தித்து அவ்வானந்தப் பெருக்கால் எழுநததே பெரிய திரு மொழி ன்னு பிரபந்தம். 'மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர் கோன் ஆறங்கம் கூற' (உபதேச ரத்ன மாலை 9) என நம்மாழ்வார் அருளிய நானகு வேதங்களுக்கொப் பான நான்கு பிரபநதங்களுககும்; வேதங்களின ஆறு அங்கஙகள் போல் மேலும் 'திருக்குறுந்தாண்டகம்' 'திரு வெழுக் கூற்றிருக்கை', 'சிறிய திரு மடல்', 'பெரிய திருமடல்' 'திரு நெடுந்தாணடகம்' ஏனனும் பிரபந் தங்களையும் அருளிச செய்தார்.

இயல் இசை நாடகம் ஆகிய முத் தமிழிலும் புலமை மிக்க இவர் ஆசு கவி, மதுரகவி, சித்ரகவி, விஸ்தார க்வி என்னும நான்கு கவிததிறங்களி லும் வல்லவராயிருந்தார். சீராம விண்ணகர் என்னும சீர்காழியில் இவர் சிஷ்யர்கள் 'நாலுகவிப் பெரு மாள் வந்தார்' 'அருள் மாரி வந்தார்' 'மங்கை வேநதர் வநதார', 'பரகாலர் வந்தார எனறும விருதுகளை ஏந்திக கொண்டு வந்தனர. அவவூரில வாழும திருஞான சமமந்தருடைய சிஷ்யாகள் இதனைத் தடுத்தனர. ஆகவே சமமநதரோடு வாதபபோர செயதிடலாமெனறு செனற இவரை 'உம் கவித திறனைக் காட்டுமாறு முந துற முனனம ஒரு பாட்டுப பாடும்' என நாயனுர் கேட்டார்

"ஒரு குறளாய் இருநிலம மூவடி மண்
வேண்டி
உலகனைததும ஈரடியாலொடுக்கி
ஒன்றும்
தருகவெனு மாவலியைச் சிறையில
வைத்த
தாடாளன் தாளணைவீர் தக்ககீர்த்தி
யருமறையின் திரள் நான்கும் வேள்வி
யைந்தும மங்களங்களவையாறு
மிசைகளேழும
தெருவில் மலிவிழா வளமுஞ்சிறக்குங்
காழிச்சீராம விண்ணகரே சேர்
மினீரே'

(பெரிய திரு. 3-4-1) என இப்பதிகம் கலியன் திருநாவினின்றும் மலர்ந் தது. இதில் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு என்னும் எணகள் அமைநதிருக்கும் அழகு காணீர்! இப்பாடலைக் கேட்டு வியப் புற்ற நாயனுர் 'உமக்கு இவ்விருது கள் தகும் தகும்' எனச்சொல்லித்தன் வேலாயுதத்தையும் அவருக்குக் கொடுத்தார் என்பது இதிகாசம்.

நந்திபுர விண்ணகரப்பன் சங்கு சக்கராயுதங்களைக் கையிலேந்தி சேவை சாதித்திடும் அழகிலே திளைத் திடும 'ஒளிசேர் கறைவளரும் வேள் வல்ல கலியன்' ஆன திருமங்கை மன் னன் 'உறைகொள் புகராழி சங்க மவை அங்கையுடையானை' என மங் களா சாஸனம் செய்கிருர். (பெரிய திரு. 5-10-10) இஙகு சுவைமிக்க, வியாக்யான சக்ரவர்த்தி பெரியவாச சான் பிள்ளை அருளிய வியாக்யானம் காணமின். 'உறைகொள் புகராழி' எனபதற்கு, "விரோதி நிரஸனத் திற்கு திருமங்கையாழ்வார் கையில் வேலுண்டாகை பிபைபு திருவாழி உறை யிலிருக்குங்காண்" என ரஸோக்தி யாக அருளிச செய்கிருர். தன வேற் படைக்கு மேன மேலும் ஏறபட்டுக் கொணடிருக்கும் இரத்தக கறையைத் துடைககக்கூட நேரமிலலாது தொடர்ந்து அப்படை கொணடு நாட்டில் சத்ரு நிரசனம செய்து கொண்டிருக்கும் திருமங்கை மன்னன இருக்கையில எம்பெருமான் திரு வாழிப் படையை உறையிட்டு வைத திருக்க வேண்டியது தானே!

"பெரும புறககடலை" (பெரிய. திரு. 7-10) என்னும் பாசுரத்தால் திருக்கண்ண மங்கைக் கண்ணனை மங களா சாஸனம் செய்கிருர். இத்திரு மொழியின் ஆழ்பொருளையறிய வேணும் என்று கண்ணனின முகக் குறிப்புத் தோன்ற, "வெண் சங்க மொனறேந்திய கண்ண! நின்றனக் கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள் தானே" எனவருளிச் செய் கிருர். கண்ணனே பரம ரசிகன் ஆகை யால் 'அர்ச்சாவதாரத்தில் இயலாது. பிறிதொரு காலத்தில் உம்மை ஆசாரி யனுகக் கொண்டு அனுபவிப்போம்' என்ருராம். கார்த்திகை மாதம் கார்த்திகை நக்ஷத்திரததில் திரு மங்கை மன்னன் நம் பிள்ளையாகத் தோன்ற, ஆவணி மாதம் ரோகிணி நக்ஷத்திரத்தில் கிருஷ்ணன் என்னும் பெயரோடு பெரியவாச்சான் பிள்ளை யாகக் கணணன் பிறநதான்! இத்திரு மொழி மட்டுமின்றி மற்ற திருமொழி களுக்கும் ஆழபொருளை நம் பிள்ளை யிடம் கேட்டறிநது பின்னர்தாவ வியாக்கியான மிட்டருளியதாகப் பெரியோர் பகவர்.

தன் திவ்ய ப்ரபந்தங்களாலும் பகவத் பாகவத கைங்கர்யமே நல் லொழுக்கங்களில் தலையாயது என நடநது காட்டியதோடு கலிதோஷத் தைக் கடிந்து நலிந்ததனுல் 'கலி கன்றி' என அழைக்கப்பட்டார். திரு மங்கை மன்னனும குமுதவல்லி யாரோடு திருக்குறுங்குடியில் எழுந் தருளியிருந்து திருக்குறுங்குடி நம்பி யின் வடிவழகைச் சில காலம் அனு பவித்துக கொணடிருந்து அங்குத்திரு நாட்டுக்கெழுந்தருளினுர்.

திருவாலி திருநகரி செனறு அங்குக் கோயில் கொண்டிருக்கும் திருமங்கை மனனன சேவிக்க இயலாதவர் இருந்த விடததே இருநது சேவிககலாமபடி,

"வேலணைதத மாாபும விளங்கு திரு
வெட்டெழுததை
மாலுரைக்கத தாழ்ந்த வலசெவி
யும-காலணைத்த
தணடையும வீரகழலும தாாக்கலி
யன வாண்முகமும்
கணடுகளிக்குமெனகண்"

என அழகிய மணவாள மாமுனிகள் தான் கண்டு சேவித்துக் களித்திட்ட வாறே படம பிடித்தாறபோல இப் பாடல் அவர் திருநாவினின்றும மலாந்தது.

# ஸங்கீத ஸத்குரு ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள்

முனனுரை :

'இப்பூவுலகில் துஷ்டர்களை அழிக்கவும் தர்மத்தை நிலைநாட்டவும் யுகங்கள் தோறும் அவதாரம் எடுப்பேன்' என்று ஸ்ரீகிருஷ்ண பகவான் கீதையில் கூறியுள்ளார். சில சமயங்களில் உலக க்ஷேமத்தை முன்னிட்டு சிவ, விஷ்ணுவாதி மூர்த்திகள் சங்கரர், ராமாநுஜர், மத்வர் முதலிய ஆசாரியார்களாக அவதரித்து உலகுள்ளவும அழியாவண்ணம் அநேக கிரந்தங்களை இயறறி வைத்துள்ளார்கள். இவ்வளவு நூல்களும் சகல ஜீவராசிகளும பந்தத்தில் சிக்கிக் கொள்ளாமல் மோக்ஷத்தையடைய வேணடும் என்ற கருணையினல செய்து வைத்திருக்கிறார்கள்.

திரு. என். ராமகிருஷ்ணன்,
சேலம்.

இவ்வகையில் நல்ல ஸங்கீதம் ச்ருதி லயத்தோடு சோந்து பகவத்தர்பணமாக பாடினல் அதுவே உணமையான மோக்ஷத்தையும், சாம்ராஜ்ய பதவிகளையும் அடையச் செய்யும் என்பதை தமது பல கீர்த்தனைகளில் பாடியனதோடல்லாமல, தம் வாழ்க்கையிலேயே மெய்ப்பித்துக் காட்டியவர் மஹான் ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள். கலைகளை எல்லாம் காசாக்குகிற இந்த பூமியிலே தேடி வந்த சன்மானங்களை உதறித் தள்ளி, காலமெல்லாம ஸ்ரீ ராமனின் புகழ் பாடுவதிலேயே தம்மை அர்ப்பணித்துக் கொணட ஓர் இசைமேதை ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் மேதாவியாகவே பிறந்து, கந்தர்வ சரீரம் பெற்று, சாகித்யம் செய்வதில் சரஸ்வதி கடாக்ஷம் பெற்று, சம்ஸ்க்ருதம், தெலுங்கு பாஷைகளிலும், ஜோதிஷ கணித மந்திர சாஸ்திரங்களிலும் சிறந்து விளங்கினர். கீதையில் கண்ணன் அருச்சுனனுக்கு உபதேசித்த கர்ம யோகம், பக்தி யோகம், ஞான யோகம் என்ற மூன்று வழிகளிலும் மூலமாக தாம் பெற்ற இனபத்தை இவ்உலகுக்கு கீர்த்தனை மூலமாக எடுத்து உரைத்துள்ளார்

அவதாரம் :

நமது தியாகராஜ சுவாமிகள் சுமார் 224 ஆண்டுகட்கு முன்னல் 1767ஆம வருஷத்தில் தஞ்சாவூர் மாவட்டத்தில் தியாகராஜ பெருமான் எழுந்தருளியிருக்கும் கமலை என்று பெயர் பெற்ற திருவாரூரில் சர்வஜிதது வருடம், சித்திரை மாதம் 25ம் தேதி, பூச நட்சத்திரத்தில் கடக லக்னத்தில் திங்கட்கிழமையனறு ஒரு தெலுங்கு பிராமணரான ராமப் பிரம்மம் என்பவர்க்கு மூன்றுவது புத்திரராக அவதரித்தார். தியாகராஜரின் முன்னேர்கள் கிரிராஜப் பிரமமம், காளஹஸ்தி ஐய்யர் தஞ்சாவூர் அரண்மனையில் சமஸ்தான விதவானுகத் திகழ்ந்தவாகள்.

இளமைப் பருவம் :

தியாகராஜருக்கு எட்டு வயதில் உபநயனம செய்வித்தார்கள். பால்யத்திலிருந்தே தியாகராஜரின் தெய்வ பக்தியை கண்ட ராமப்பிரம்மம் தான் ஆராதனை செய்து வந்த பட்டாபிஷேக விக்ரகங்களை தம் புதல்வரே பூஜை செய்யுமபடி அக்ஞாபித்தார். தியாகராஜர் தினமும் விடியறகாலையில் ஸ்நானம் செய்து ராம விக்ரகங்கள்மீது முதல் நாள் சாத்தப்பட்ட பழைய பூக்களை எடுத்துவிட்டு புதுப் பூக்களை வைப்பார். அப்போது அவர் "ஆஹா! ராமனுக்கு வாடும் புஷ்பங்களையா அணிவிப்பது? வாடாத பாமாலை அலலவா சாத்த வேண்டும்" என்று மனமுருக எணணுவார். தினமும் காலையில் பூஜைக்கு புஷ்பமெடுக்கப் பூந்தோட்டம் செல்லும் வழியில ஸொண்ட்டி வீணை வெங்கட்ரமணதாஸர் வீட்டில் நடக்கும் சங்கீத பாடத்தில் மனம் லயித்தார்.

குரு கிடைத்தாா :

தியாகராஜரின் ஸங்கீத ஆர்வத்தை கண்ட ராமப்பிரும்மா ஸொண்ட்டி வெஙகட்ரமண தாஸரிடம் ஸங்கீதப் பயிற்சிக்கு ஏற்பாடு செய்தார். ஒரு வருடத்திலேயே எல்லா விஷயங்களையும் நன்கு கற்று தியாகராஜர் குருவின் அன்புக்குப் பாத்திரமானர். இந்த இசைப பயிற்சியுடன் மட்டுமல்லாமல் தியாகராஜர் தெலுங்கும், சமஸ்கிருதமும் நன்கு கற்றுத் திறமையை வளர்த்துக் கொணடார். இவ்வாறு ஸங்கீத பயிற்சி பெற்ற பினனர் சிறுசிறு கீர்த்தனைகளைப் பாடி பகவானை ஸ்தோத்திரம் செய்தார். பணடிதர்கள் துணை கொண்டு பஜனைகள் நடத்தினர் தியாகராஜரால் பஜனைகளின் மதிப்பு அதிகமாயிற்று.

திருமணம் :

தியாகராஜர் தமது பதினெட்டாவது வயதில் பார்வதி என்ற பெண்ணை மணந்து கொண்டார். மனைவி பக்தி நிரம்பப் பெற்றவர்.

குரு உபதேசம :

ஒரு முறை காஞ்சிபுரத்திலிருந்து ராமகிருஷ்ண யதீந்திரர் என்ற மஹான ஸ்ரீ ராமன கட்டளைப்படி திருவையாறு வநது சேர்நதார். அவர் வழக்கம் போல் உஞசவிருத்தி பாகவதா பஜனை செய்து திருமஞ்சன வீதிககு வருமபோது தியாகராஜரும் அவரது மனைவியும் பாத பூஜை செய்து பூஜித்தனர். தம்மை வணங்கித துதித்த தியாகராஜரின் மனநிலை அறிநது யதீந்திரர் "குழந்தாய்! 96 கோடி ராமநாம ஜபம் செய்து ராமதரிசனம் பெறும் பாக்யத்தை அடைவாய்!" என்று உப

தேசித்தருளினர். தியாகராஜர் மிகுந்த மகிழ்ச்சியுடன் திருவையாறு பஞசநதீஸ்வரா ஆலயத்தின் தென் புறம் உள்ள தட்சிண கயிலாயம் என னும இடத்தில் அமாந்து ராம நாமத்தை மிகுந்த பகதியுடன் உச் சரித்து வந்தார்

இசை ஞானம்

தியாகராஜர் முதல முதலாக ஸ்ரீ விக்னேஸவர மூர்த்தியினமீது 'கிரி ராஜ ஸுதா, தனய'' என்ற கீர்த் தனையைப் பாடினர். பாகவத் சம்பிர தாயப்படி உஞ்சவிருத்தி பஜனை செயது பாகவத் நாம கீாத்தனைகளை செய்து பாடி வந்தார் தியாகராஜர். தியாகராஜரின் பெருமை கண்டும் பஜனை செயது வாழும் போக்கைக் கண்டும் அவரது சகோதரர்கள் மனம் வெறுத்து ஒதுக்கினர் அப்போது அவர் தனக்குத் தானே ஆறுதல் சொல்லி 'எந்துகோ பாகதெலியது, கலினருலகு, அனுதுடனகானு, ஏபா பமு, எந்நாடு நீ தோவ' என்றெல் லாம் கீாத்தனைகள பாடினர். ஒரு முறை பிரதோஷ தினத்தன்று தியாக ராஜரும் அவரதுமனைவியும் உபவா சம் இருந்து ராமதியானம் செய்து ஒன்றும் அருந்தாமல் இருந்தார்கள். அப்போது ஸ்ரீராமபிரானே சீதா ஆஞ்சநேய சமேதராய் கனிவர்க்கங் கள் கொண்டு தியாகராஜரை முதுமை தமபதிகள் வேடத்தில் உணவருநத வேண்டினர். இதையே தியாகராஜர் "கலுகினபத'' என்ற பாட்டில் பாடி உளளார். இவவாறு தினந் தோறும் ஸ்வாமிகள் ராமசந்திர மூர்த்திக்கு அபிஷேக அலங்காரஙகள் செய்து பூஜை செயது, ராமநாப ஜபம் செய்து, பகவத ஸநநதியில் கீர்த்தனைகளைப் பாடியும சிஷ்யர் களுடனும் பாகவதர்கள பணடிதா களுடனும் புதிய பல கீாத்தனைகளை செய்து தவிய நாம பஜனை செய்து இசையுடன் கூடிய பகதி மயமான வாழ்ககை நடத்தி வந்தார்.

ஸத்குரு தரிசனம :

ஸஙகீதத்தில் பெரிதும் ஆர்வம கொண்ட தியாகராஜரை குரு யதீந்



திரர் கிரந்தங்கள் நன்முக விளங்கும் பொருட்டு நாரத மஹரிஷியை உபா சனை செய்யுமாறு கூறி நாரத உபா ஸன மந்திரத்தை உபதேசித்தார். அதன்படியே ஸ்வாமிகளும் உபாசனை செய்து வந்தாா. தியாகராஜரின் புகழ்கணடு சகிக்காத ஊரார சிலர் 'இவருககு ஸ்வரஞானம் கிடையாது' எனறு தூஷித்தனர். ஸ்வாமிகள் இன்னும் அதிகமான ஸங்கீத ஸம்பத் துளள கீர்த்தனைகளை செய்து தமது புலமையை எடுத்துக் காட்ட எண்ணி கன ராகங்களில் பஞ்ச ரதன கீர்த்தனைகளை ஸ்வர ஸாகித்யத் துடன் செய்தார். ஒரு நாள் காலை தியாகராஜர் எணணைஸ்நானம் செய்ய விருந்தபோது துறவிஒருவர் அவரைத் தேடி வந்தார். ஸ்வாமிகளும் உடனே அவரை வணங்கி பூஜித்தார். துறவி தியாகராஜரின கீர்த்தனைகளைக் கேட்க விருமபுவதாகக் கூறியவுடன், எண்ணை உடம்புடன இருப்பதையும் பார்க் காமல் சில கீர்த்தனைகளை அழகாகப் பாடினா. அதைக் கேட்டு பேரானந்த மடைந்த துறவியார் "தியாக ராஜனே! பாடுகிறவனும் கேட்கிற வனும சேர்ந்து அனுபவிக்கக்கூடிய கானரஸம் உன்னிடம்தான் கண் டேன்! இந்த ஓலைச் சுவடிகளை வைத்துக் கொள்! ஸ்நானம் செய்து விட்டு வநது பெற்றுக் கொள்கிறேன்'' என்றுகூறிச்சென்றா. தியாகராஜரும் காத்திருந்தார். துறவி போனவர்

வரவில்லை. அன்றிரவு ஸ்வாமிகளின் கனவில் துறவி தோன்றி 'தியாக ராஜனே! நான் நாரதன். உன்னிடத்தில் நான் கொடுத்துப் போனது 'ஸ்வரார்ணவம்' என்ற அரிய சங்கீத நூல். இதை பூலோகத்தில் யாரும் அறியார். மேலும் 'நாரதீயம்' என்ற நூலும் உள்ளது. இதைக் கொண்டு ஸங்கீதத்தின் பெருமைகளை வெளிப்படுத்து வாயாக' என்று கூறி மறைந்தார். நாரதர் கனவில் கூறியபடி ஸ்வரார்ணவமும் நாரதீயமும் கண்டு பேரானந்தம் கொண்டு ஸ்வாமிகள் நாரதர் மேல 'ஸ்ரீ நாரத (கானடா ராகம்) நாரத கிருஸ்வாமி (தர்பார் ராகம்) வரநாரத (விஜயஸ்ரீ ராகம்) நாரதமுனே (பைரவி) நாரத கான லோல (அடாண) போன்ற நாரத பஞ்ச ரத்ன கீர்த்தனைகளைப் பாடினர். சிறிது சிறிதாக 'ஸ்வரார்ணவ' சங்கீத நூலிலிருந்து ஸங்கீத உண்மைகளை அறிந்து ஸங்கீத மேன்மையை உணர்த்த ஸ்வர ராக ஸுதாரஸ (சங்கராபரணம்), கீதார்த்தமு (சாடி), சங்கீத சாஸ்திர ஞானமு (முகாரி) நாதோபாஸன (பேகட) மோக்ஷமுகலதா (சாரமதி) முதலிய அர்த்த புஷ்டியுள்ள கீர்த்தனைகளைப் பாடியருளினர் தியாகராஜர். ஸ்வரார்ணவம் கிடைத்துப் பல விஷயங்களைக் கற்றுக் கொண்ட உண்மையை "ஸ்வரராக ஸுதா" என்ற கீர்த்தனையில் வெளிப்படுத்தியுள்ளார். தியாகராஜரின் புகழ் தஞ்சை முழுவதும் பரவி 'ராஜா'வே உஞ்சவிருத்தி பாகவதரை தரிசிக்க வந்தார். ஸ்வாமிகளிடம் ஏராளமான சிஷ்யர்கள் சேர்ந்தனர். இவ்விதமான சிஷ்யகோடிகள் கொண்ட ஸ்ரீஸ்வாமிகள் ஸ்ரீராம நவமி, ஸ்ரீகிருஷ்ண ஜன்மாஷ்டமி, வைகுண்ட ஏகாதசி முதலிய விசேஷ நாட்களில் வாத்யங்களுடன் பஜனை செய்து உஞ்சவிருத்தி செய்து உதஸவங்களை நடத்தி வந்தார்.

**புகழ்க்கொடி :**

தியாகராஜர் ஒரு நாளைக்கு 18 மணி நேரத்தில் 1,25,000 ராம ஜபம் செய்து வந்தார். ஆகவே சாப்பாடு, பஜனை தவிர மற்ற நேரமெல்லாம் ஸ்ரீராம தபஸையே சதா சர்வ காலமும் செய்து வந்தார். தியாகராஜ ஸ்வாமிகள் பெரியவர்களால் வால்மீகி அவதாரமாகவே கொண்டாடப்பட்டார். இது அவரது 'ஏபணிகோ ஜன் மிஞ்சிதினனே' 'ஏவரணி நிர்ணயிஞ்சிரா' கீர்த்தனைகளிலிருந்து வெளிப்படுகிறது. ஒரு சமயம் தெலுங்கு நாட்டிலிருந்து அதிக செருக்குடன் 'கேசவய்யா' அகங்காரத்துடன் ஸ்வாமிகளுடன் போட்டிப் போட்டார். ஸ்வாமிகள் அப்போது பக்தியுடன் 'எந்தரோ மஹானுபாவுலு' 'விதுல ம்ரொக்கெத' என்னும் கீர்த்தனைகளைப் பாடினர். அவரது முரட்டு சங்கீதத்திற்குத் தக்க பதிலளிக்க 'ஜகதானந்தகாரக' என்னும் பஞ்ச ரத்ன கீர்த்தனைகளைபபாடிக்கேட்பவர்களை பிரமிக்கச் செய்து அவரது அகந்தையழித்து புதுமனிதனுக்கினர். இதைப் போலவே மற்றொரு சமயத்தில் காசி மாநகரில் வசித்து வந்த 'கோடி நாதர்' ஸ்ரீ ராமன் கட்டளைப்படி தியாகராஜர் பால் அன்பு கொண்டு அவரது இசைத் திறமையைக் காண திருவையாறு வந்தார். அப்போது ஸ்வாமிகள் ராமனருளை வியந்து 'தாசரதி நீ ருணமு' (தோடி) என்னும் கீர்த்தனைகளை மனமுருகிப் பாடினர்.

**எளிய பற்றற்ற வாழ்க்கை :**

மெலிந்த உடம்பு, நல்ல உயரம், கழுத்து நீண்டிருக்கும். கழுத்தில் துளசி மாலைகள் அணிந்திருப்பார். சிவந்த நிறம், குடுமி வைத்திருப்பார். தலைப்பாகையோடு இணைந்த அங்கி முதுகுப்பக்கம் தொங்கிக் கொண்டிருக்கும். நெற்றியில் கோபிச் சந்தனம் இருக்கும். இதுவே தியாகராஜரின் எளிமையானத் தோற்றம். ஸ்வாமிகள் அமைதியானவர். சிறிதும் ஆடம்பரம் இல்லாதவர். இந்த எளிய வாழ்க்கையிலும் அவர் விரும்பியது ராமன் மீதான பக்தி ஒன்று தான். சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான இவரை மற்ற இருவர் முத்து சாமி தீட்சதரும், சியாமா சாஸ்திரிகளும் அடிக்கடி திருவையாறு வந்து ஸ்வாமிகளின் சங்கீதத்தைக் கேட்டு அனுபவிப்பார்கள். தியாகராஜரின் அற்புதமான இசைத் திறமையை அறிந்த அப்போது தஞ்சாவூர் மன்னரான 'சரபோஜி மகாராஜா' அவரை தம் ஆஸ்தான வித்துவானாக நியமித்து இசையின் இன்பத்தில் திளைக்க விரும்பிநிறைய பொன்னும், மணியும், பொருளும் கொடுத்தனுப்பி அவரது சம்மதம் அறிய விரும்பினர். அப்போது ஸ்வாமிகள் 'பகவானுடைய சந்நதியில் ராம பஜனை செய்வதை விட்டு மனிதனைப் புகழ்வதா' என்று எண்ணி 'நிதிசால சுகமா' என்னும் கல்யாணி ராக பாடலைப் பாடித் திருப்பி அனுப்பி விட்டார். இதனால் கோபமடைந்த சரபோஜி மகாராஜா தியாகராஜரை கொண்டு வரும்படி இருவரை அனுப்பினர். அதே சமயம் மகாராஜாவுக்கு கடுமையான வயிற்று வலி ஏற்பட்டது. மருந்து ஏதும் பலனளிக்கவில்லை. பிறகு மகாராஜா தியாகராஜரிடம் தாமே சென்று மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். பிறகு இருவரும் நண்பரானர்கள். சரபோஜி மகாராஜா எப்படியும் தியாகராஜருக்கு உதவி செய்ய வேண்டும் என்று விரும்பினர். தியாகராஜர் உஞ்ச விருத்தி பஜனை செய்து வரும்போது அவர் அறியாமலேயே பொற்காசுகளைப்போடச்செய்தார். தியாகராஜர் அவற்றைத் தெருவிலேயே கொட்டி விட்டார். இவ்வாறு பொன்னுக்கும் பொருளுக்கும் என்றுமே ஆசைப் படாமல் பற்றற்ற வாழ்க்கை நடத்தினர்.

**பரமன சோதனை :**

இவ்வாறு தம்மைத் தேடி வந்த செல்வத்தை வெறுத்து ஒதுக்கியதைக் கண்ட தியாகராஜரின் மூத்த சகோதரன் மனதில் பகைமைப் பாராட்டி அழுக்காறு கொண்டு ஒரு போகி பண்டிகையின் போது ராம லக்ஷ்மண விக்ரகங்கள் இருக்கும் வரை

வீடு உருப்படாது என்று தீர் மானித்து ஒரு நாள் இரவு யாருக்கும் தெரியாமல் ஸ்ரீ ராமசந்திர பட்டாபிஷேக விக்ரஹங்களை காவிரி ஆற்றின் பெரு வெள்ளத்தில வீசி யெறிந்து விட்டான். காலையில் ஸ்வாமி தரிசனம செய்யச் சென்ற தியாகராஜா விக்ரஹங்களைக் காணாமல் துடிதுடித்து அழுதார். தமது பரிதாப நிலையை 'எந்துதாகி' என்னும் கீர்த்தனையால் ராமனிடம் தெரிவித்துக் கொணடார். எங்குத் தேடியும விக்ரஹங்கள அகப்படாமையால் ஸ்ரீராமனை நினைத்துப் புலம்பிக் காலத்தைக் கழித்த ஸ்வாமிகள் ஒரு வருடம் கழித்து "ராமா! இனியும் உன் பிரிவைத் தாங்கமாட்டேன். உபவாச விரதம் பூணடு உன்னடியை அடைகிறேன' என்று தீவிர வைராக்கியததுடன விரதம் பூண்டார். தியாகராஜரின் பக்திக்கு மனமிரங்கி ஒரு நாள் அவரது கனவில் ஸ்ரீராமன் தோன்றி "தியாகராஜ! வருந்தாதே! காவிரி ஆற்றின் நடுவில் மணலில் தோண்டிப் பார்த்தால் எனது விக்ரஹங்கள் கிடைககும்" என்று கூறி மறைநதார். தியாகராஜர் அப்போதே காவேரி ஆற்றிற்குச் சென்று விக்ரஹங்களை கண்டெடுத்து மார் மீது சாத்திக் கொணடார். குருடனுககுக் கண் வந்தது போல ராம விக்ரஹங்களை மறுபடியும் பெற்ற தியாகராஜா பூஜா மணடபத்தை நன்கு அலங்கரித்து அபிஷேகம செயது 'முத்துமோமு, அலகல்ல' மற்றும் பக்தி கீர்த்தனங்களாக நூறு ராகங்களில் சதரத்ன மாலிகையை ஸ்ரீஹரிககு அர்ப்பணம் செய்தார் ஸ்வாமிகட்கு ஏராளமான சிஷ்யாகள் சேர்நது எல்லோரும் பக்தியில் ஈடுபட்டு குருவுடன் பஜனையில் ஈடுபட்டு அவரின் கீர்த்தனைகளின் சங்கீத நுட்பத்தை எங்கும் பிரகாசப்படுத்தினர்கள.

ஸ்ரீராம தரிசனம் :

தினமும் சிறிது சிறிதாக 21 வருஷங்களில் தியாகராஜர் 96 கோடி ராம ஜபத்தை பூர்த்தி செய்தார். ராம ஜபம் முடிந்த போதிலும் கீர்த்தனைகளைப் பாடிக் கொண்டிருந்தார ஸ்ரீராம தரிசனத்திற்காக ஏங்கிக கொண்டிருந்த வேளையில் ஒரு நாள் விசுவாமித்திரரின் யாகத்தை காக்கவென்று ஸ்ரீராமலட்சுமணர்கள் கௌசிக முனிவருடன் சென்ற திருக் கோலம் சுவாமிகளின் கண்கட்குமுன தோன்றி மறைநதது. தியாகராஜர் ஸ்ரீராமனை அப்போது பேரானந்தம் கொண்டு 'பாலககையே' 'ஏலநீதயாரது' 'ராமா நின்று நம்மிநானு' எனும் கீர்த்தனைகளை மனமுருகப் பாடினர். தியாகராஜர் ராமனை கொஞ்சி, கோபித்து, அணைத்து தாமே தசரதனகவும், ஜானகியாகவும், அஞ்சநேயராகவும்,தோழராகவும் எண்ணிப் பாடினர். தியாகராஜர் 100க்கு 99 சதவீதம் ராமனமீதுதான் பாடினர். வால்மீகி இராமாயணத்தில் 24,000 ஸ்லோகங்கள் உள்ளதைப் போல தியாகராஜரின பாடல்களும் 24,000 என்று கூறப்படுகிறது. ஆனல் அவற்றில் சுமார் 700 பாடல்களே இப்போது வழக்கில் உள்ளன.

திரை விலகியது திருமலையில் :

தியாகராஜர் 1834ஆம் ஆண்டு காஞ்சிபுரத்தில் இருந்த தம் தந்தையின் நண்பரான உபநிஷத் பிரும்மம் என்பவர் அழைப்பை ஏற்று காஞ்சிபுரம் சென்று அவரது இல்லததில் விருந்தினராக தங்கி பல பஜனைகள் நிகழ்ததி காஞ்சி வரதராஜ பெருமானைத் துதித்துப் பாடினர். பிறகு அங்கிருந்து தியாகராஜர் பல்லக்கில் அமர்நது திருமலை ஸ்ரீனிவாசப் பெருமானைத் தரிசிக்க விரும்பி திருப்பதி க்ஷேத்திரம் நோக்கிச் சென்றர். அப்போது அவரது பக்தியை யாவரும் அறியும் வண்ணம் ஓர் அறபுத நிகழ்சசி நிகழ்ந்தது. அப்போது அடிவாரத்திலிருந்து ஏழுமைல்கள் மேலே ஏறிதான் ஏழுமலையானைத் தரிசிக்க வேண்டும். தியாகராஜரும் அவரது சீடர்களும் அதிகாலையில் படியேறத் தொடங்கி பகல் 11 மணி அளவில் திருமலைக் கோயிலை அடைநதனர். பிறகு ஸ்நான ஜபம் கர்மாக்களை முடித்துக் கொண்டு திருவேங்கடவனின் சந்நிதானத்தை அடைந்த போது காலைப் பூஜை முடிந்து விட்டதால ஸ்ரீனிவாசப் பெருமாளின் முன் திரை போடப்பட்டிருநதது. ஸ்வாமிகள் தரிசனம் செய்ய கோரி திரை விலககக் கேட்டுக் கொணடபோது அர்ச்சகர்கள் திரையை விலக்க மறுத்து விட்டனர். இவ்வளவு தூரம் வந்தும் இறைவனை கண்ணாரக் காண முடியவில்லையே என்று மனம் கசிந்து 'தெர தீய்யகராதா' என்ற கீர்த்தனையைப் பாடினர். உடனே கர்ப்பக் கிருகத்தை மறைத்திருநத திரை விலகியது. அனைவரும் இக்காட்சியை கண்டு அதிசயித்தனர். பக்தியுடன் ஸ்ரீ வெங்கடேச பெருமானை தரிசனம் செய்து 'வெங்கடேச நின்னு ஸேவிம்ச' என்ற கிருதியைப் பாடி ஸ்தோத்திரம் செய்து பஜனைகள் செய்து விட்டு அங்கிருந்து புறப்பட்டார்.

தியாகராஜரும் திருவாங்கூர் மகாராஜாவும் :

தியாகராஜரின் காலத்தில் திருவாங்கூரில் மன்னராக இருந்த சுவாதித் திருநாள் மகாராஜா சிறந்த இசை மேதை. அவர் சமஸ்கிருதம், மலையாளம், தெலுங்கு, கன்னடம், ஹிந்தி போன்ற பல்வேறு மொழிகளில் பாடல்களை இயற்றும் திறமைப் பெற்றவர். கேரள மாநிலத்தின் இயல், இசை மற்றும் பரத நாட்டியத்தை முதன் முறையாக வளர்த்து சிறநத இசை மேதைகளை வரவழைத்து கௌரவித்து கேரள அரச பரம்பரைக்கே புகழ் தேடித் தந்தவர் சுவாதி திருநாள் மகாராஜா. அவர் தியாகராஜரின் இசைத் திறமையைப் பற்றி நிறைய கேள்விப்பட்டுத் தமது ஆஸ்தான வித்வான் வடிவேலு என்பவர்மூலம் தியாகராஜரை அழைத்து வர அனுப்பினர். வடிவேலு தமது சங்கீத திறமையின் மூலம் தியாகராஜரின் அன்புக்கு பாத்திரமாகி பிறகு தக்க சமயம் பார்த்து திரு

வாங்கூர் மகாராஜா அவரை சந்திக்க விரும்புவதை எடுத்துரைத்தார். தியாகராஜர் யோசனை செய்து 'அந்த சந்திப்பு இப்போது நிகழ்வதாக தெரியவில்லை. ஆனால் நாங்கள் அடுத்த பிறவியில் சந்திக்கலாம். அவர் வழிபடும் பத்மநாபரும் தான் வழிபடும் ராமரும் உள்ள வைகுண்டத்தில் சந்திப்போம்' என்று கூறினார். தியாகராஜர் இறைவனை அல்லாமல் மனிதனைப் புகழ்ந்து பாடுவதை விரும்பாததே அதற்குக் காரணம்.

**தியாகராஜர் வழங்கிய இசை:**

நாடெங்கும் உள்ள இசை மேதைகள், தியாகராஜரின் இசைத் திறமையை அறிந்து அவர்மீது அளவு கடந்த பக்தி செலுத்தினர். மிகக் குறுகிய நேரத்தில் இனிமையாகவும், எளிமையாகவும் அழகிய கருத்துக்களுடனும், பக்தி ரசத்துடனும் பணடிதர் முதல் பாமர் வரை குழந்தைகளும் விரும்பி ரசித்து பாடும் வண்ணம் பாடல்களைப் பாடி உள்ளார் தியாகராஜர். கர்நாடக சங்கீதத்தில ஒரு மறுமலர்ச்சியையும் புதுத்திருப்பத்தையும் ஏற்படுத்தினார். பாடல்கள் இயற்றுவதிலும், அவற்றுக்கு ராகம் அமைப்பதிலும், அவறறைத் தமது இனிய குரலில் பாடுவதிலும் அவருக்கு நிகர் அவரே. இதுமட்டுமல்லாமல் காவியம, வேதம, புராணம், சோதிடம, கணிதம், மநதிரம் முதலிய கலைகளிலும் சிறந்து விளங்கினார். இசையுடன் பக்தியை கலந்து ஸ்ரீராமனையே நாதமாகவும், ஸ்வரமாகவும், ராகமாகவும கொண்டு இசை மூலமாக மோட்சத்தை அடையலாம எனபதை நிருபபிததுககாட்டினார். 200ககு மேறபட்ட ராகங்களில் பாடல்களை இயற்றி 'தோடி' ராகத்தில் மட்டும் 30 பாடல்களை இயற்றி சாதனை படைத்தார் தியாகராஜர்.

**உயிர் கொடுத்த இசை:**

திருப்பதியிலிருந்து காளஹஸ்தி செல்லும் வழியில் புத்தூர் என்னும் கிராமத்தை ஸ்வாமிகள் அடைந்த போது அங்கு ஒரு வீட்டில் அழுகுரல் கேட்டு என்ன என்று வினவிய போது சேஷய்யா என்ற ஒரு பிராம்மணன் திருப்பதி செல்ல மனைவியுடன் வந்து கொண்டிருந்தபோது இரவில் காட்டு மிருகங்களின் பயத்தினால் எல்லா வீடுகளும் சீக்கிரமே மூடிவிட்டதால் தங்குவதற்கு இடமில்லாததால் அங்குள்ள ஒரு கோவிலின் மதிலேறிக் குதித்துத் தாளைத் திறப்பதாக மனைவியிடம் கூறி குதித்தபோது இருட்டில் அவ்விடத்தில் ஒரு கிணறு இருக்க அதில் விழுந்து இறந்து விட்டான். விடியற்காலையில் இதை அறிந்து மனைவி அழுது கொண்டிருக்கிறாள் என்பது தெரிந்தது. இதைக் கேட்ட ஸ்வாமிகள் மனம் வருந்தி 'ஏ ராமா! உன பக்தர்கட்கு இக்கதி வரலாமா என்று வருந்தி 'நாஜீவாதார' என்ற பிலஹரி ராகப் பாடலைப் பாடி ராமனைத் துதித்து துளசி தீர்த்தத்தை தெளித்தார். அப்போதே இறந்தவன் உயிர்ப் பெற்றெழுந்தான். எல்லோரும ஸ்வாமிகளுடைய திருவடியைப் பணிந்தனர். பிறகு அவர் காளஹஸ்தி சென்று ஸ்வர்ணமுகி நதிக்கரையிலுள்ள விஷ்ணு மூர்த்தியை தயானம் செய்து 'நீவே கானி நனனெவரு' கீர்த்தனையையும, சோளிங்கபுரம் லக்ஷ்மி நரசிம்ம ஸ்வாமியை தரிசிதது 'நரஸிமஹ நனுப்ரோவ, நரஸிம்ஹ மாம்பாஹி' எனற க்ருதிகளையும் அங்குளள லோக ஆஞ்சநேயை குறிதது 'பாஹி ராம தூத' எனனும் கீர்த்தனைகளையும் பாடினார்.

பிறகு அஙகிருந்து சுநதரேஸ்வரர் சௌநதர நாயகி கோயில் கொணடுள்ள கோவூா சென்று 'சம்போ மஹாதேவ, ஈவசுதா நீவண்டி, கோரி சேவும் பராரே, நமமிவசின, சுந்ரேச்வருனி' எனற 'கோவூர் 'பஞ்சரத்னம்' என்ற கிருதிகளால் பாடித் துதித்தார்.

பிறகு கோவூரிலிருநது திருவையாறு திரும்ப முடிவு செய்து யாத்திரையை தொடங்கினார். இரவு வேளையில் காட்டு மார்க்கமாக செல்லும்போது திருடர்கள் சிலர் பின் தொடருவதைக் கண்டு சீடர்கள்பயத்தால் நடுங்கிக் கொண்டு சுவாமிகளிடம் தெரிவித்தனர். திருடர்கட்கு கொடுத்து உதவும்படி நம்மிடம ஒன்றுமில்லையே என்று சுவாமிகள கூறியபோது மற்றொரு சிஷ்யர் 'ஸ்வாமி! கோவூர் சுந்தர முதலியாா ஸ்ரீ ராம நவமி உற்சவத்திற்காகக் கொடுத்த 1000 பொற்காசுகள் அடங்கி பை நம்மிடம் உள்ளது,'' என்று கூறியபோது 'ஸ்வாமிகள் அப்படியானால் அபபணத்தை ராமனே காபபாற்றிக் கொள்ளவார்'! என்று சொல்லி ஸ்ரீராமன் பேரில் 'முந்து வென நனிரு' என்ற கீர்த்தனையைப் பாடினார். பிறகு எந்த தொந்தரவும் இல்லை. சிறிது நேரம் கழித்து திருடர்கள் ஓடி வந்து தியாகராஜனின் முன் விழுந்து வணங்கி 'சுவாமி' எங்களை மன்னித்து விடுங்கள். நாங்கள் தங்களிடம கொள்ளையடிக்கத்தான் வந்தோம். ஆனால் யாரோ இரு வீரர்கள் கண்ணைப் பறிக்கும் அழகுடன் வில்லும் அம்புமாக தங்கள் பல்லக்கைக் காத்து வருவது எங்களுக்குத் தெரிந்தது. அவர்களுடைய அழகும் வீரத்தையும் பார்த்தால் அவர்கள் கடவுளாகளாகததான இருககவேணடும. தங்களும் ஒரு மகானாகததான இருகக வேண்டும். எங்களை மனனித்து விடுங்கள்' எனறு வேண்டினா. அப்போது ஸ்வாமிகள் 'உங்கட்கு பகவான தரிசனம கிடைததுளளது. அவாகள ஸ்ரீராம லடசுமணாகள்! நீஙகள புணயசாலிகள' எனறு சொலலி 'எநத பாகயமு கல்கிதிவி' எனனும் கிருதியைப பாடினா. ஸ்ரீராம த்யானததின பயனைப் பல சிததிகளையும், அபாரமான சஙகீத திறமையையும பெறற தியாகராஜ சுவாமிகள் பகவத குணஙகளை ஸங்கீத நாடகங்களாக இயறறதீர்மானித்து 'நௌகா சரித்திரம, சீதாராம விஜயம், பரஹலாத பக்த விஜயம்' எனற மூனறு ஸஙகீத புண்ய சரித்திரங்களை எழுதினார்.

(48-ம பக்கம பாாக்க

# உலகைக்காக்கும் சூர்ய பகவான்

''சௌரம் குங்கும சங்காசம் ரத்நா
பரண பூஷிதம்!
மாணிக்க மகுடோ பேதம் ரக்த
புஷ்பை ரலங்கிருதம!
சதுர்புஜ சமோபேதம் பத்மத்வய
கரான் விதம்!
அபீதி வரதோபேதம் பிரபா மண்டல
மத்யகம்!
(*தியான ஸ்லோகம்*)

'குங்குமம் போன்ற சிவந்த நிறத்த வரும், சிவந்த ரத்னங்களால் ஆனஆப ரணங்களை அணிந்தவரும், மாணிக்க மணியிலான மகுடத்தைச் சூடிச் சிவந்த புஷ்பங்கள் நிறைந்தமாலை அணிந்தவரும் தன நானகு கைகளில் மேற்கரங்களில் செந்தாமரை ஏந்திய வரும், மற்றவைகளில் அபய, வரத முத்திரை கொண்டு பிரகாசம் பொருந்திய மண்டலத்தில் வசிப்ப வருமான சூரியனைப் போற்றுவோம்'.

ஆதிசங்கரர் ஷண்மதங்களை நிறுவும் காலத்தில் ஐந்தாவது இடத்துல் சூரியபகவானை முழுமுதற் கடவுளாக அமைத்துத் தந்தார். (காணபத்யம், கௌமாரம், சைவம், வைஷ்ணவம் சௌரம், சூரியன், சாக்தம்)

சூரியனை முழுமுதற் பொருளாக நினைந்து உருகும் அடியார்களை சௌரமானர்கள் என்று போற்றுவர்.

உலகத்தோற்றத்தின்போது முதன் முதலில் ஓம் என்ற ஓசை உண்டா யிற்று. அவ்வோசையிலிருந்து ஒளி மயமான சூரியன் தோன்றினுன் என்று மார்க்கண்டேய புராணம் கூறுகிறது. காசியபருக்கும் அதிதிக்கும பிறந்த விகவவான் முதலிய பன்னிரண்டு மக்களே பன்னிருஆதித்தியர் ஆனுர் கள் என்று பாரதம் கூறுகிறது.



சூரியனுக்காக எழுப்பப்பட்ட ஆலயங்கள்:

கி. பி. 8 ஆம் நூற்றுண்டில் காஷ் மீரத்தில் ''மார்த்தாண்டர்'' என்ற சூரியன் கோயிலும், கி.பி. 11 ஆம் நூற்றுண்டில் பரோடாசோதிபுரிக்கு அருகில் சூரியன் கோயிலும், ஓரிசா வில் (பூரிக்கருகில்) கோணுர்க் சூரியன் கோயிலும் உள்ளன. தமிழ் நாட்டில் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானசூரியனுர்கோயில் எனும் தலத்தில் முதற்குலோத்துங்கச்சோழ னுல் (கி. பி. 1079–1120) தமது 44-வது ஆட்சியியாண்டில் சூரியபக வானுக்குக் கறறளியாக் கோயில் அமைத்தான்.

திரு. எஸ். நாராயணசுவாமி,
எம்.ஏ., பி.எட்.
திருவாவடுதுறை.

மேலும் ஐரோப்பா, தென் அமெரிக்கா, சீனு முதலான நாடுகளில் அழிபாடற்ற நிலையில் சூரியன் கோயில்கள் தொல்லியல் மூலம் காணப்படுப்படுகின்றன.

சிவன் கோயில்கள் அனைத்திலும் மூலஸ்தானத்தை நோக்கி சூரியனும், சந்திரனும் நிற்பதைத் (வலதுபாகம்- இடது பாகம்) தரிசிக்கலாம்.

வழிபாடு :

சைவர்கள் சூர்யனை ''சிவ சூர்யன்'' என்பர். வைஷ்ணவஅடியார்கள்'சூர்ய நாராயணன்' என்றும் போற்றுவர். சூர்யபகவான் '' நவக்கிரகங்களில் '' நடு நாயகராக விளங்குபவர். நவக் கிரகங்களை சிவாலயங்களில் இரண்டு முறைகளில் பிரதிஷ்டை செய் கின்றனர். 1. ஆகமப் பிரதிஷ்டை, 2. வைதிகப் பிரதிஷ்டை.

பெரும்பாலும் ஆலயங்களில் மூல ஸ்தானத்தின் வட கிழக்குப் பாகத்

தின் நவக்கிரகப் பிரதிஷ்டைதல் செய்யப்பெறும்.

சூரியன, சந்திரன், அங்காரகன், புதன், பிரகஸ்பதி, சுக்கிரன், சனி, இராகு, கேது எனும் ஒன்பது பேர் களும் நவக்கிரகங்கள் என்று அழைக் கப்படுவா. நவநாயகர்கள் என்று போற்றப்படும் நவ நாயகர்களுக்கு உலகில எங்கும் காணுத வகையில் தமிழ் நாட்டின சூரியனர் கோயில் (திருமங்கலக்குடி எனும தலத்திற்கு அருகில்-தஞசை மாவட்டம்) எனும் தலத்தே கறறளியாக நிர்மாணிக்கப் பட்டுள்ளது.

நாம் காணும சூரியன :

சூரியன பூமியிலிருந்து சுமாா 9,28,70,000 மைல் தூரத்தில் உள்ளது. இதன குறுக்களவு சுமாா 8,64,000 மைல். இதன கன அளவு பூமியைப்போல் 13,00000 மடஙகு. அதாவது 13,00000 பூமிகளேச சூரி யன் தன்னுள் அடக்கக் கூடியது. சூரி யன் தன்னைத்தானே சுற்றிககொண்டு வருகிறது. சூரியன் ஒரு தடவை தன்னைத்தானே சுற்றுவதற்குச் சுமார் 4 வாரங்களாகும். 12 ராசிகளேயும் 365 நாள், 15 நாழிகை, 32 விநாடி யிற் சுற்றி வந்து உலகு வாழ் உயிர் களை வாழ்விககினறது.

சூாயபகவானின ரூபஙகள் :

சூரியனுா கோயில தலததில விளங கும் சூாயபகவான காப்பகிருகத்தில நின்ற கோலத்தில் (மேற்கு நோக்கி) தமது இரு கரஙகளில செந்தாமரை யினை ஏநதியும் இடது பக்கம உஷா தேவியுடனும், வலது பக்கம் சாயா தேவியுடனும் விளங்குகினறுர்.

ஆத்த மணடபத்தின் வாயிலின் முன்பாக தண்டி, பிஙகலன் எனும் துவாரபாலகாகள விளங்குகினறனா. சூாயனைப் பாாததவாறு மகாமணட பத்தில் குருபகவான (வியாழன) அபய வரத ஹஸதஙகளுடன விளங்கு கினறுர். ஏனைய கிரகங்கள் சனி, புதன், அங்காரகன் (செவ்வாய), சந்திரன், கேது, சுக்கிரன், ராகு இவைகள் சுற்றிலும் தனித்தனி கோயில் கொணடு அருட்காட்சி வழங்குகினறனா.

சூரியபகவானைப்பற்றி (உரியவை) :

| | |
|---|---|
| சூர்யன் | —காசியபமுனி வரின் புத்திரர் |
| தேவிமார்கள் | —உஷா, பிரத் யுஷா |
| நவக்கிரகங்களில | —முதன்மையிடம் (நடுநாயகர்) |
| வாகனம | —ஏழு குதிரைகள் பூட்டிய ரதம் |
| இராசி | —சிம்மம் |
| திக்கு | —மேற்கு முகம் அல்லது கிழ்த் திசை |
| தலம் | —சூரியனுர் கோயில் |
| அதிதேவதை | —அக்னி |
| பிரத்யதி தேவதை | —உருத்திரன |
| நிறம் | —சிவப்பு |
| தானியம் | —கோதுமை |
| மலர் | —செந்தாமரை, வெள்ளருக்கம்பூ |
| வஸ்திரம | —சிவபபு ஆடை |
| இரததினம் | —மாணிக்கம |
| நைவேததியம் | —கோதுமை, சாக கரைப்பொங்கல் |
| நட்புக் கிரகங்கள் | —சநதிரன, செவ வாய், குரு |
| சமமான கிரகம் | —புதன் |
| பகைக கிரகம | —சுககிரன், சனி |
| உபகிரகம் | —காலன் |
| மூலத்திரிகோண விடு | —சிங்கம் |
| நறபல ஸ்தானம் | —லக்னத்திற்கு 3, 6, 10, 11ல் நிற கில. |
| தேவதை ஸ்தானம | —1,2,9,4,5,12 |
| காரகன் | —கண், பறகள |
| கிரக பிரகிருதி | —தேயு |
| சூர்யத் திசைக்கு போதகன | —குஜன |
| ,, வேதகன | —சுககிரன் |
| ,, பாசகன | —சனி |
| ,, காரகன் | —குரு |
| மநதிரம | —ஆதித்ய கிருதயம் |
| காயத்ரி | —சூாய காயதரி |
| சூர்ய நமஸ்காரம் செய்தால | —சரீர பலம, ஆனமீக பலம |
| குணம் | —சாத்வீக குணம |
| உலோகம் | —தாமிரம் |
| இனம் | —க்ஷத்திரிய இனம் |
| உபாயங்களில் | —தண்ட உபாயம் |
| ஆண, பெண், அலி இம்மூன்றில் | —ஆண கிரகம |
| உச்ச வீடு | —மேஷம் |
| நீசவீடு | —துலாம் |
| பகைவீடுகள் | —ரிஷபம, மகரம, கும்பம |
| நட்சத்திரங்களுக்கு நாயகன் | —கிருத்திகை, உத்திரம உத்திராடம் |
| கிழமை | —ஞாயிறு |
| சூர்யவம்சத்து அரசர்கள் | —இக்ஷ்வாகு அரிச்சந்திரன், விஸ்வாமித திரர், இராமன் முதலானேர் |
| சூரியன் கோயில் கள் | —கோனுர்க்- ஒரியா, சூரிய னுர் கோயில் |
| நூலகள் | —வேதங்கள், ஆக மஙகள், புரா ணஙகள், நவக கிரக பூஜாவிதி, அஷடோத்ரம், சகஸ்ரநாமம், சோதிட நூல் கள், நவக்கிரக துதி, பருதிவன (சூரியனுர் கோயில்) தல புராணம். |

இன்னல நீஙகி நலம பெற்று வாழ

இத்தலத்தில சூரியன பிரதான தெயவமாக விளஙகிட மறறைய கிர கங்கள சுற்றிலும் உளளன. ஆயு தங்கள் இன்றியும வாகனங்கள இன்றி யும இருபபதால அநுககிரக மூாத்தி களாக விளங்குகினறனா. இககோ யில் அமைப்பு வேறு எஙகும இலலை

''அஸவ தவஜாய வித்மஹே
பதம ஹஸதாய திமஹி
தநநஸ ஸூாய ப்ரசோதயாத் ||
-காயதரி மநதிரம்

இத்தகைய பெருமானின திருவடி களைப் போறறித துதித்து வழி பாடாறறி இனனல் நீங்கி இனிது வாழ்வீர்.



# கார்த்திகை தீப மகிமை

ஆ. மோகனு, நாங்குனேரி.

தேவி ஆறறங்கரையில கட்டப்பட்ட அழகிய திருக்கோயில பாங்குடன் பார்த்துப் பார்த்து அழகுறக கட்டினுன் மைத்ரேயன் என்ற ராஜ புரோகிதன். திருமால் அடியார்களில் சிறந்த மைதரேயன, கோயிலில் ஸ்ரீமந நாராயணனை பிரதிஷ்டை செய்து நாள்தோறும வழிபட்டுவநதான. சோடச உபசாரங்களை குறையற சமர்பபித்தான். விசேஷமாக எம்பெருமானுக்கு தீபாரோபன கைங்கர்யத்தை ாடுபாடுடன் நடத்தி வநதான. அநேக தீபவரிசைகளால் கிருத்திகா மாததில கோயிலையே அலங்கரிததான. இது நாராயணனுக்கு பிரீதிகரமானது என்பதனுல் அவனுடைய ஈடுபாடு மேலும் அதிகரித்தது. இரவு பகல் எரிகினற அகணட தூண்டாவிளககுகளையும சமர்ப்பித்தான். அல்லும் பகலும விதயாசமின்றி கோயில் தேஜோமயமாய் விளங்கிறறு. ஒரு நாள நள்ளிரவு பகவத ஸநநிதானத்திலுள்ள தூண்டாவிளக்கின் திரி கருகி, ஒளி குனறி அணையும்நேரம் எலியொனறு க்ரீச் என்ற சப்தததுடன அவ்விளக்குத திரியை இழுததுச செல்ல ஓடோடி வந்தது. ஆனுல பரிதாபம்! எதிரே ஓர் பூனையைக கணடது. நடு நடுஙகி நாம இததுடன ஒழிநதோம எனற பயத்தினுலேயே பிராணனை விட்டது. இப்பொழுது எலியின வாயினுல் தீபம் தூணடப்பெறறு, மீண்டும் சுடர்விட்டு ஒளிமிஞ்சி பிரகாசித்தது. பகவான நாராயணன இவ்வொளியில் இவையனைத்தையும் கண்டு ரசிததுக் கொணடிருந்தானு? அவனது சங்கல்பம்தான என்ன? அதை யாரே அறியவல்லார்?

மக்கட்பேறின்றி வருந்தித் தவங்கிடந்த விதர்ப்ப ராஜனின மனைவி வயிறு வாய்த்து பெண் மகவொன்றைப் பெற்றெடுத்தாள. பெற்றோர் மகிழந்தனர். குழந்தைக்கு லலிதை எனறு பெயர் சூட்டினர். செலலமாக வளாத்தனர். குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தாள். கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினுள். திருமகளைப் போல் அழகுடன் விளங்கும் லலிதையை காசியரசனுககு மணம் முடித்தனர். காசியரசனுடைய 300 மனைவியருககும் தலைவியானுள். பட்டமகிஷியான இவள் தன அழகு, குணம் முதலியவற்ருல் முநநூற்றுவரையும் கவாந்தாள். ஒருநாள உத்யான வனததில் நடுவே ஒரு திருக்குளம். குளம் நிறையத் தாமரை மலர்கள். பளிங்கினுல் அமைநத குளக்கரையில் அழகிய திருக்கோயில். கோயிலினுள்ளே வாஸுதேவனுடைய திவ்ய மங்கள விக்ரகம். இப்பெருமானிடம் ஈடுபாடு கொண்ட லலிதை இறைவனுக்கு உபசாரஙகள் அனைத்துடன பூசை எடுத்து வழிபடுகிருள. பூவால் பொன அணியால, பூம்பட்டால் அவனை அல்ங்கரித்தாள். ஒளி விளக்குகள் ஏற்றி எமபெருமானைத்திருப்திபடுத்தினுள்.

கார்த்திகை மாதம் வந்துவிட்டது. கோயில ஒளிபபிழமபாய மஙகள தீபங்களால அலங்கரிககப்பட்டுக் காணபோர் மனததையும், கணகளையும ஈாக்கும்படித் திகழ்நதது. காசிராஜனின் 300 மகிஷிகளும் கோயிலுககு வநதனர். பகவானை சேவிதது விட்டு அங்கே பகவத் சேவையில ஊனறியிருக்கும் லலிதையுடன "அமமா நீ எங்களுக்கெலலாம தலைவி, முக்கிய படடததரசி, எவ்வளவோ அரச போகஙகள் இருக்க, அதிலெல்லாம் நாட்டம கொள்ளாது, இந்த தீப கைங்கர்யத்தில் ஈடுபாடு கொண்டிருப்பதன் காரணம் தான் என்ன? இது எங்கள் மனததை நெடுநாளாக நெருடிக்கொண்டிருக்கிற ஐயமாகும். விடை பகாந்தருள வேணும" எனறு வேணட பட்டத்தரசி லலிதாதேவி அவர்களை அனபுடன் அழைத்து, பரிந்துரை கூறி கோயிலில் அமரச்செய்து கூறலுற்ருள்.

நான் ஜன்மாந்தரத்தில் தேவி ஆந்றங்கரையில ஒரு எலியாக வாழ்ந்து வந்தேன அந்த இழி ஜனமமுடைய எனக்கு விதர்ப்பராஜனுடைய மகளாகப் பிறப்பதறகு யான் அறியாமல் செய்த ஒரு செயல் காரணமாயிருந்தது என்று தேவி ஆற்றங்கரையில ஸ்ரீமந் நாராயணனுடைய திருக்கோயிலில நள்ளிரவு நடந்த வரலாற்றினைக் கூறினுள்.

'ஒரு க்ஷண நேரம் எம்பெருமானுக்கு தீபத்தைத் தூண்டின பலத்தினுலே தீபகைங்கர்யபலன் ஏற்பட்டு அதன் பயனுல் கிடைத்தற்கரிய ராஜகுலத்தில் பிறவியும், உங்களனைவருக்கும் தலைவியாய் இருக்கும் பெற்றியும் இவையனைததும ஏற்பட காரணமாயிருந்தது. மேலும் சிறிதுநேரம் ஒளிர்விடச் செய்த புண்ணியமே இவ்வளவு பலன் தரவல்லது என்ருல் அநேக தீபமேற்றி அல்லும் பகலும், வழிபட்டால் எவ்வளவு பலன் கிடைக்கும்? சாதாரண நாளிலேயே ஒளிரச் செய்ததற்கு இந்தப் பலன் என்ருல், கார்த்திகை மாதத்தில் தீபம் ஏற்றி வழிபடுபவனுக்கு எத்துணை அதிகப்பலன கிடைக்கும். எம்பெருமான உகநத கார்த்திகையில் கார்த்திகை நிறைமதி நன்னுள் சந்தியா காலததில் தீபாரோபன உத்ஸவத்தை நடததி எம்பெருமானை உகப்பிததால் எப்பேறுதான கிடைக்காது! எனககு முற்பிறவி ஞாபகம் உள்ளது. தீபாரோபன கைஙகாயத்திற்கு எணணற்ற பலனைக கண்கூடாக கைமேல் அனுபவித்துள்ளேன. ஆகையினுல் இதில் விருப்பம கொண்டேன். நீவிரும இக்கார்த்திகை முழுவதும் எம்பெருமானுககு தீப வரிசைகள் ஏறறி வழிபடுஙகள். கார்த்திகையன்று விசேஷமாக தீபாரோபனம் செய்து, அவனை ஆராதித்து மகிழச் செய்யுங்கள் நற்கதி கிடைக்கும்' என்று கூறினுள்.

ஆதாரம். மோக்ஷதர்மம — மகாபாரதம்

卐

# திருமலையில் தங்கு வசதிகளுக்கான நன்கொடைத் திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில் நின்றவண்ணம் அருள் புரியும் வேங்கடவனைக் காண நாட்டின் பல முனைகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு நாள்தோறும் வருகை புரிகின்றனர். அவர்கள் திருமலையில் தங்குவதற்கென்று திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல தர்ம சத்திரங்களையும், குடில்கள், விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்கு வசதி கட்டிடங்களையும் கட்டியுள்ளது. வருகை புரியும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருவதை மனதிற்கொண்டு மேலும் தற்போது உள்ள விருந்தினர் விடுதி, குடில்களின் மேல் பொதுமக்களின் நன்கொடைத் திட்டத்தின் கீழ் மற்றுமொரு தளத்தினைக் கட்டுவதென்று மேலாண்மை முடிவெடுத்துள்ளது. யாத்திரிகர்/பக்தர்களுக்குத் தொண்டு புரிந்திடும் ஓர் அரிய வாய்ப்பாக இரக்கமனமிக்க பொதுமக்கள் அல்லது தனியார் நிறுவனம் அல்லது அறக்குழு ஆகியன இத்திட்டத்தினைப் பயன்படுத்திக்கொள்ளும் என நம்புகிறோம்.

## முதல தளம் :

ஆழ்வார் ஏரி, மங்களபாவி, சங்குமிட்டா, சேஷாத்ரிநகர், அஞ்சநாத்ரி, கருடாத்ரிநகர் ஆகிய காட்டேஜ்களின் ஏ மற்றும் பி பகுதிகளின் மேல்கட்டப்பட்டு வரும் 'சி' மற்றும் 'டி' பகுதிகள். 872 முதல் 1012 சதுர அடி பரப்புள்ளதாக இப்பகுதிகள் அமையும். இவ்வொரு பகுதிக்கும் வழங்கவேண்டிய நன்கொடைத் தொகை ரூ. 1, 50 இலட்சமாகும்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள் :

ஒவ்வொரு தளத்திலும் 50 அறைத்தொகுதிகள் வீதம் மூன்று தளங்களைக்கொண்ட மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டப்பட்டு வருகின்றன. இவற்றில் 166 அறைத்தொகுதிகள் நன்கொடையாளர்களுக்கு ஒதுக்கப்பட்டுவிட்டன. 44.5 சதுர மீட்டர் பரப்புள்ள இவ்அறைத்தொகுதிக்கான நன்கொடை தொகை ரூ. 60,000 ஆகும்.

## ஸப்தகிரி சத்திரங்கள் :

இச்சத்திரக்கட்டிடம் 9 தொகுதியினைக் கொண்ட 954 அறைகளுடன் விளங்கும். இவற்றில் 943 அறைகள் நன்கொடைத் திட்டத்தின் கீழ் ஒதுக்கப்படும். 1×12'4' அளவில் இவ்வறைகள் விளங்கும். இவ்அறைக்கான நன்கொடைத் தொகை ரூ. 40,000 ஆகும்.

## 2-வது விருந்தினர் விடுதி :

சேஷாத்ரி நகரில் இரண்டாவது விருந்தினர் விடுதியில் உள்ள இரணடு தளங்களில் கட்டப்பட்டுள்ள 26 அறைத் தொகுதிகள் நன்கொடைத் திட்டத்தின்கீழ் ஒதுக்கப்படும். 4.20 மீ × 4.20 மீ பரப்பளவில் இவ்வறைத் தொகுதிகள் விளங்கும். இவ் இரண்டாவது விருந்தினர் விடுதிக் கட்டிடத்திற்காகவோ அல்லது தளம் முழுமைக்கோ நன்கொடை பெற மேலாண்மை விழைகினறது. விடுதி கட்டிடத்திற்கான நன்கொடைத் தொகை ரூ. 25 இலட்சமாகும்.

மேற்கூறிய இத்தங்கு வசதி கட்டிடங்களுக்கான நன்கொடையினை தனிநபர்/தனியார் நிறுவனம் அறக்கட்டளை போன்ற எந்தப் பெயரிலும் வழங்கலாம்.

## சலுகைகள்

நன்கொடையாளா அல்லது அவர் உறவினர்கள் அலலது நிறுவனத்தின் அல்லது அறககட்டளையைச் சார்ந்த உறுப்பினர்களோ அல்லது அவற்றின் அலுவலர்களோ வருடத்தில 60 நாட்களுக்கு, (ஒரு முறை தங்கிடும்போது 10 நாட்களுக்கு மிகாமல்) இலவசமாக அவர்கள் நன்கொடை அளிதத தங்கு வசதிகளில் தங்கலாம். அவர்கள் நன்கொடை வழங்காத தங்கு வசதிகளில் தங்க நேரிடின், வித்யாசப்படும் வாடகைத்தொகை மட்டுமே அவர்களிடமிருந்து வசூலிக்கப்படும்.

நன்கொடையாளர்களின் பெயர், முகவரி கொண்ட கற்பலகை ஒன்று முதல தளம்/அறைத் தொகுதி/அறை ஆகியவற்றில் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். முழு விவரங்களுக்கு:

Executive Officer, T. T. Devasthanams, Tirupati - (A. P.) 517507. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

தரும் பொருள் சிறியதே : பெறும் அருள் பெரிதே:

(16-ம பக்கத் தொடர்ச்சி)

தமிழ் துணைகொண்டு பாமாலை வடித்தும் அளித்துள்ளார். அப்பாமாலையே "திருமாலை"யாக ஒளி விடுகிறது. நாற்பத்தைந்து பனுவல்களான அத்திவ்யபிரபந்தத்தில ஆழ்வார் ஆண்டவனின புகழ்மொழிகளை பல புகல்கிறார். அவனுல் தனக்குண்டான பெருமையினைப் பறைசாற்றுகிறார். திருவரங்கத் திருக்கோயில கைங்கர்ய வாழ்வே மேலானதென முழங்குகிறார். பெண வலைப்பட்டார் பெரியபெருமாள் பேரருளால் மட்டுமே உய்யமுடியுமென உணர்ந்துரைக்கிறார். அடியார் பெருமையையும், அல்லாதார் சிறுமையையும விதந்தோதுகிறார். இவவாறாக திருமாலையானது திருமாலுக்கான ஒரு புகழ்மாலையாக—அவனிடம்கொள்ள வேண்டிய பக்திமாலையாக —அவனடியாரைப் போற்றும் அன்புமாலையாக எல்லாவற்றுக்கும மேலாக, இலக்கிய நயமும், இறை நேயமும் ஒருசேர மிளிரும் நவரத்தினமாலையாக ஒளிர்விடக் காணலாம.

இனி, திருமாலையின் அழகுநலன்களைச் சிறிது சுவைப்போம்.

'அரங்கமாநகருளானின் திருநாமங்கள் தித்திக்கும் பெற்றியவை. திகட்டாத அமுதினும நலம் பயப்பவை. அவற்றைச் சிந்திப்பதே பெரும பேறு. மற்றைய இந்திர லோக வாழ்வென்பதெல்லாம் நிலையில்லா பேறு' எனகிறார் ஆழ்வார். இவ்வுலகில் இறைவன திருப்புகழைப் பாடித் திரிவதே தமக்குப் போதுமானது, மேலுலக வாழ்வெதுவும் தேவையில்லை என்று ஆணித்தரமாக மொழிகிறார்.

" பச்சைமா மலைபோல மேனி பவளவாய்
கமலச செங்கண
அச்சுதா அமர ரேறே! ஆயர்தம
கொழுந்தே' எனனும
இச்சுவை தவிர யானபோய் இந்திர
லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன
அரங்கமா நகருளானே! "

என்று திருமாலையின் இரண்டாம் திருப்பாடலை அறியாதவர் யாருமிருக்க முடியாது.

அடுத்தப் பாடலும் அருமையான கருத்தமைந்த பாடலாகும. மனிதனுக்கு நூறாண்டுகள் வாழ்வுண்டு என்பது வேதநூல் கருத்து. ஆனால் அதில் பாதி உறக்கத்தில் கழிந்து போகிறது. மீதியுள்ள காலத்தில் பதினைந்தாண்டுகள போதிய அறிவு பெற்றிராத பாலகனுகச் சென்று விடுகிறது. எஞ்சியுள்ள காலத்திலும பிணி, பசி, மூப்புத் துன்பத்திற்காளாகித் தவிக்க வேண்டியுள்ளது. எனவே இவ்வுலகில பிறவியெடுப்பதென்பது பெருந்தீங்காகவே உள்ளது. எனவே பிறவி வேண்டாமென்கிறார் ஆழ்வார். பிறப்பறுக்கும பேராளனை பெரியபெருமாளிடம் தம வேண்டுகோளை வெளியிடுவதன் மூலம தசகவரிடம் இரக்கும் தம தகைசால் மதிநுட்பத்தைப் புலப்படுத்துகிறார் தொண்டரடிப்பொடியாழ்வார்.

அடுத்து வரும் பாடல்கள் அகிலத்தவரை அரவணையானுக்கு ஆட்படுமாறு வற்புறுத்துவன. வினை வயப்பட்டவன் மனிதன். ஆனால் எவ்வினையும் எம்பெருமானைத் தொழுதால் தொலைந்து போகும். இதனை உணர்ந்திருந்தும் மனிதன்பெண்சுகம் வேண்டியே உணவருந்தி உடல் வளர்க்கிறான தண்துழாய் மாலை மார்பன் தமராய் பாடியாடித் தொண்டு பூண்டு அமுதம் உண்ணாத் தொழும்பரை வாழ்கிறான். அவன வாழ்க்கை புறஞ்சுவர் கோலஞ் செய்தலை ஒத்துள்ளது அறய சுவராகி நின்ற அரங்கனார்க்கு ஆட்பட்டால் உடலகத்துள்ள ஆன்மாவுக்கு உய்வு கிட்டும. புத்தம், சமணம போன்ற பிறமதங்கள் காட்டும் தெய்வங்களை நாம் தொழவேண்டியதில்லை. நமக்கு "சிலையினால் இலங்கை செற்ற தேவனே தேவனுவான்" எனகிறார் ஆழ்வார். ஆனால் நாம் சேர்த்து வைத்துள்ள செல்வத்தின் மீதே கண்ணுக இருந்தால் நமக்கு நல்ல தோா அருள் செய்ய வரும் கருடவாகனனும புலப்படமாட்டான். உயயும வண்ணம உள்ள திருவரங்கமும் தெரியமாட்டாது. எனவே நாம 'வெறிகொள் பூந்துளவமாலை விணணவர்கோனை'யேத்தும் விதமாக "அரங்கம்" என்றழைத்தாலே போதும், நரகத்தில் இடர்படுவாா யாருமின்றி புல்லெழுந்து ஒழிந்து போகும். ஆழ்வாருக்குத் திருவரங்கின் மீதான பேரன்பு சொல்லுந்தரமன்று. திருவரங்கத்தினை புகழ்ந்துரையாதவன் உணடு உயிர் வாழத் தக்கதகுதியற்றவன. எனவே 'அவனை உணவருந்த ஒட்டாது அவன் உணவை நாய்க்கிடுங்கள்' என்பது ஆழ்வாரின் கட்டளை. இக்கருத்தமைந்த பதினுன்காம் பாடல் பின் வருமாறு.

" வண்டினம் முரலும் சோலை
மயிலினம் ஆலும சோலை
கொண்டலமீ தணவும் சோலை
குயிலினம் கூவும் சோலை
அணடாகோன அமரும் சோலை
அணிதிரு வரஙக மென்னு
மிண்டாபாய்ந்து உண்ணும் சோறறை
விலக்கி நாய்க் கிடுமி னீரே "

பாடல் கோபத்தில கொப்பளித்துக கொண்டுதான் வந்துள்ளது. ஆனால் கூடவே இயற்கையழகு கொஞ்சுகிறதலலவா? இறைவனின் மீதான பற்று மின்னி மிளிர்கிறதல்லவா?

பதினைந்தாம பாடல தொடங்கி முப்பத்தேழாம் பாடல் முடிய நாம் காணபது ஆழ்வார் பலவாறு அரற்றி அழுது அரங்கனின அருள் வேண்டுவதாகும் ஆழ்வார் தம்மை மெய்யர்க்கே மெய்யனுகும் விதியிலாதவராகக் கூறிக்கொள்கிறார். புட்கொடியுடைய கோமானே பொய்யர்க்கே பொய்யனுகும் அழகனும்! அவன் ஆழ்வாருடைய ஐயப்பாட்டினை அறுத்தெறிந்து மாதர் தம் கயற்கண வலையிலின்றும் அவரைக் காத்த

ருளியதாகக் கூறுகிறார். அவனரு ளாலேதான் அவன தாள் வணக்க மும் நமககுச் செய்யத் தோன்றும். எமபெருமானின அருள் பெற்றுய்வ தறகு முன்னுலே ஆழ்வாரிருந்த நிலையை அவரே கூறக் காணபோம.

"போதெலலாம் போது கொண்டுன
பொன்னடி புனைய மாட்டேன்
தீதிலா மொழிகள் கொணடுன
திருக்குணம் செபபமாட்டேன
காதலால நெஞசம அனபு
கலநதிலேன் அதுதன னுலே
ஏதிலேனஃ அரஙகர்க்கு எலலே!
என்செய்வான தோனறினேனே!"

(திருமாலை 26)

"என் செய்வான தோன்றி னேனே?" எனற வினா நாம் எல்லோ ருமே நமககுள கேட்டுக் கொள்ள வேணடியதொனருக அல்லவா உள் ளது அணி அரஙகர்ககுப் பூப் புனைந்து போட்டுத் தொழாவிடடால் நல்ல புகழ் மொழிகளால் அவனது கருணை ததுமபும குணததினைப் போற்றிசைக்காவிட்டால் அவனேடு அன்பால் இரணடறக கலக்கின்ற பேறு பெருவிட்டால் —நாமெல்லாம் என் செய்வதற்காக இப்பிறப்பெடுத் தோம?

இருபத்தொன்பதாவது பாடல் மிகவும உயரிய பாடல். இவ்வுலக உறவெல்லாம ஒரு உறவாகுமா? நிலம, வீடு, உறவு, உறவினா எனப தெல்லாம் நிலைத்திருககுமா? பரம மூர்த்தியின் பாதமூலமன்றி நம் துன் பத துடைப்புககு வேறெதுவும வழி யுணடா? ஆழ்வாரின கதறல் அழ கிய பாடலாக வெளிப்பட்டுளளது. அபபாடல இதோ :

"ஊரிலேன் காணி யிலலை உறவுமற
றெருவ ரிலலை
பாரில்நின் பாதமூலம் பற்றிலேன்
பரமமூர்த்தி
காரொளி வண்ணனே! என்
கண்ணனே! கதறு கின்றேன்
ஆருளர் களைகண்? அம்மா!
அரங்கமா நகரு ளானே!"

தொண்டரடிப் பொடியாழ்வார் அநதணராய்ப் பிறந்திருநதாலும பிறபபால் உயாவு தாழவு பாராத வர். ''வானுளார் அறியலாகா வானவா'' என்பராகில் எக்குலத்த வரும் அவருககு உயாகுலத்தவரே. மாறாக வேதம நான்கும் ஓதிய சாதி அந்தணர்களே ஆயினும எம்பிரான் அடியார்களைப பழிபபராயின் அவர் களெல்லாம் ஆழ்வாரைப் பொறுதத மட்டில் புலையாகளே ஆவா.

நாற்பத்தைநதாம பாடலில் எம பிரார்க்குத் 'தம் இளையபுன் கவிதை யும் இனியவாறு ஏலும்' எனறு கூறி திருமாலையை முடிக்கிறா தொணட ரடிப் பொடியாழ்வார்.

அடுத்து, 'திருப்பள்ளியெழுசசி' என்ற தொணடரடிபபொடியாழ்வா ரின் திவயப் பிரபந்தததின சிறப் பைப் பற்றிச் சிறிது காணபோம்.

பெரிய பெருமாளுக்குத திருப் பள்ளியெழுச்சி பாடிய பெரிய பெருமைக்குரிய ஒரே ஆழ்வார் தொணடரடிப் பொடியாழ்வாரா வார். சாதாரண மன்னர்களெல் லாம்கூட காலைதோறும துயில நீங்கி எழ வேணடி பாடுவார் உணடு அதைக் கண்ணுற்ற ஆழ்வார் பாற கடலில் பளளி கொணடருளும் பரம னுக்கும் திருப்பளளியெழுச்சி பாடும் எண்ணம் கொணடவராளுா. அவனே அறிதுயில் கொணட மாய வன. அவனுககு நேரததினை உணாத்த வேணடிய தேவையில்லை. ஆனல் பெரியாழ்வாா எப்படி எம பெருமான் மீது மறறவர் கணணெச சில் படலாகாதென்றபெருந்தாயனபு மீதூரப் பெற்றவராய் பல்லாணடு பாடினரோ, அவ்வாறே தொணட ரடிப் பொடியாழ்வாரும எமபெருமா னின் ஏறறமும், எழிலும நனி விளங் கத் திருப்பள்ளியெழுச்சி பாடியுள ளார். இத்திவ்ய பிரபநதத்திலுள்ள பத்துப் பாடல்களும் தினமும பாடிப் பரவத்தகக அற்புதப்பாடல்களாகும்.

முதற்பாடல் யாவருக்கும் தெரிந்த பாடல. அடுத்து வரும் ஒனபது பாடலகளின சாரமாக விளங்கும பாடல. அதன பொருள வருமாறு. கிழக்கு வானில சூரியன தோன்றி விட்டான. இருட்கணம அகன்றது. காலைப்பொழுது வநதுவிட்டது. மலாகள விரிந்து தேன ஒழுகலா யிறறு. வானவாகளும, அரசாகளும் முறைபபடி வரிசையில் நினறு போற றிசைககினறனர். அவர்களோடு யானைகளின கூட்டமும, முரசும் பெரி தாக முழஙகுகினறன. அவற்றால் எழும்பும் பேரொலியானது அலைகட லின் ஆரவாரம போல் உள்ளது இவையனைத்தும அரங்கனை அரவ ணைப பளளியினினறும் எழுந்திருந்து அருள வழங்குமாறு வேணடியே நிகழ்கின்றன.

அபபாடல் வருமாறு

''கதிரவன் குணதிசைச் சிகரம்வந்
தணைந்தான
கனையிருு ளகனறது காலையம
பொழுதாய
மதுவிரிந் தொழுகின மாமலரெலலாம
வானவ ரரசர்கள வந்துவந் தீண்டி
எதிாதிசை நிறைநதனா இவரொடும்
புகுநத
இருஙகளிற றீட்டமும் பிடியோடு
முரசும
அதிாதலில அலைகடல போன்றுளது
எங்கும
அரங்கததம மா! பளளி
யெழுந்தருளாயே!''

இரணடாவது பாடலில் கஜேந்திர னுககு இரஙகிவந்து அதன துயா தீர்த்த எமபெருமானின் எளிவநத தன்மை புகலப்பட்டுளளது. உலகின ஒரு மூலையில் எஙகோ ஒரு பொய கையில் ஏதோவொரு முதலையால ஏதோவொரு யானையின் கால் கவ் வப்பட்ட நிலையில் அந்த யானையா யானது அத்துன்பம தாளாது கதறி யழுதால் திருபபாற்கடலில் பளளி கொண்டுள்ள எம்பெருமானுக்கு எனன வந்தது? ஆனல் அவன் அவ் விதமாகவா நினைத்தான்? எப்பொழு தும் கருடனின் மீது அழகாக அமர்ந்து கொண்டு அலங்கார வடி வினனாய் எங்கும வரககூடியவன், அப்பொழுது தன் அழகிருந்தவாற் றைக் காணாதவனாய், கருடனின் வேகம் போதாதென்று நினைத்தவ னாய், அதன மீது தானமர்ந்து பயணம் மேற்கொள்ளாமல் அவன் முனனே செல்லவும், கருடன் பினனே வர யானை இருந்த பொய் கைககு வந்து சேர்ந்து, தன கைச் சக்கரத்தால் முதலையின் உடலை கிழித் தெறிந்து யானையின் காலை விடுவித்து அதன் துயரைத் தீர்த்தபின்னல்லவா அவனின் அவசரம் அடங்கியது. அத்தகைய கருணாமூர்த்தி தனனைக் காண வேணடி வலிய வநது தன் திரு முன்பில் திருப்பள்ளியெழுசசி பாடு வார்க்கு அருள் புரியாமலா போவான்?

''விழுங்கிய முதலையின பிலம்புரை
பேழ்வாய்
வெள்ளெயி றுறஅதன
விடத்தினுக் கனுஙகி
அழுங்கிய ஆனையி னருந்துயர்
கெடுத்த
அரங்கததம் மா! பளளியெழுந்தரு
ளாயே!

என்று பாடுவார்க்குப் பரமன அருள் கிட்டுவது நிச்சயம்.

நானகாம் பாடலில் இராமாவதா ரச் சிறப்பு கூறப்பட்டுள்ளது. நிலவுல கில் தீயோா தொகை மிகுந்து அவ ரால் நல்லோர் பெருநதுன்பம் அடை கினறபோதெலலாம தான அவதா ரம் செயது தீயோரை அழித்து நல் லோரைக் காப்பதாக கீதையிலே கண ணன கூறியுள்ளான். அக்கூற்றுக் கிசைய இலங்கையிலிருந்து கொண்டு மனிதர்களுக்கும், மாமுனிகளுககும் இனனல் பல இழைத்து வநத இராவ ணனையும, அவனைச் சுற்றியிருந்த அரக்கரையும் தம் விலலாற்றலால் தொலைத்துக் கட்டியவன இராமன். அவன் முன்னரே விஸ்வாமித்திர

முனிவரின் வேள்வியை அரக்கரின் இடையூறுனின்றும் காத்தவன்.

> “.........இலங்கையா குலத்தை
> வாட்டிய வரிசிலை வானவ ரேறே!
> மாமுனி வேள்வியைக் காத்து
> அவபிரதம்
> ஆட்டிய அடுதிற லயோத்தியம் மரசே!
> அரங்கத்தம மா! பள்ளி யெழுந்
> தருளாயே!”

என்ற திருப்பள்ளியெழுச்சி பாடல் அயோத்தியரசனும், அரங்க நகர் அழகனும் ஒருவனே என்பதைவெளிப்படுத்துகிறது. இராமன் கொடிய வனான இராவணனைக் கொன்றான். நல்லவனான அவனது தம்பி விபீடணனைக் காத்து இலங்கைக்கரசனாக்கினான். எனவே, ‘ஆண்டவன் ஒருவன பிறந்த குலத்தை நோக்குவதில்லை. தனக்கு அடியவனானால் எக்குலத்தவனையும் காப்பான். தன்னடியாரைத் தாக்குபவனானால் எப்பேர்ப்பட்டவனையும் விடாது அழிப்பான்’ என்பது தெளிவாகும். இராமனால் இலங்கை வேந்தனான விபீடணன் வழிபட்ட திருக்கோயில் திருவரங்கம் என்ற குறிப்பு, ஐந்தாம் பாடலில் வரும் “இலங்கையர் கோன் வழி பாடுசெய் கோயில்” என்ற அடியில் பொதிந்து வைக்கப்பட்டுள்ளது.

ஆறுவது பாடல், அரவணையானைப் பள்ளியெழுப்ப பன்னிரண்டு ஆதித்தரும, பதினொரு ருத்ரர்களும, மயில் வாகனனாகிய முருகனும, மருதர்கள் ஒன்பது பேரும், வசுக்கள் எட்டு பேரும், தேவ சேனாதிபதியான முருகனின் சேனையும் திரண்டு வந்திருப்பதாகக் கூறுகிறது. இங்கே கூறப்பட்டிருப்பவர்களெல்லாரும மனிதர்களால் தொழப்படும் நிலையில் உள்ளவர்கள. அவர்களே எமபெருமானைப் பாடிப்பரவித் துயிலுணர்ந்த அவனை நாடி வந்துள்ளனரெனில் நம்மைப் போன்ற சாதாரணமானவர்கள் அவனையும், அவனிருக்குமிடத்தையும் சரியாக அறியாதவர்கள் — அவனை எவ்வாறெல்லாம நினைந்து நினைந்து மனம நெகிழ்ந்து நெகிழ்ந்து போற்றி வழிபாடியற்ற வேண்டுமெனபது சொல்லாமலே தெரியலாகும். பெரிய பெருமானுக்குப் பள்ளியெழுச்சி பாட வந்தோர் பட்டியலை பின்னரும் தேவர்கள், மருதர்கள், இந்திரன், கந்தருவர், வித்யாதரர்கள், நாரதர் என்று நீட்டிக் கொண்டே போகிறார் தொண்டரடிப் பொடியாழ்வார்.

‘எல்லோருமாகக் கூடி எமபெருமானுக்குத் திருப்பள்ளியெழுச்சி பாடுவதெல்லாம் அவன் துயில் நீங்கி வந்து திருச்சபையில வீற்றிருக்கையில் அவன் அருளைப் பெறுவதற்காகத்தான்’ என்ற உண்மையை,

> “ .. ..அவர்க்குநா ளோலக்கம அருள
> அரங்கத்தம்மா! பள்ளி யெழுந்தரு
> ளாயே!”

என்ற ஒன்பதாம்பாடலடிகள் வெளிப்படுகின்றன.

கடைசிப் பாடலான பத்தாவது பாடலில் தம்மைத் திருமால அடியார்க்கு அடியானாக்கும் அருளைப பொழியுமாறு அரங்கனை வேண்டுகிறார் தொண்டரடிப் பொடியாழ்வார். நம் வேண்டுகோளும் அதுவாகவே இருக்க வேண்டுமென்பதைச் சொல்லத் தேவையில்லை.

தொண்டரடிப் பொடியாழ்வார் துளப மாலைக் கைங்கரியம் செய்து தூயவனின் நெஞ்சில் நிறைந்தவர். திருமாலை பிரபந்தம் அருளி, திருமாலே திக்கற்றவரான நமக்கு கதி எனக் காட்டியவர். திருப்பள்ளியெழுச்சி பாடி எம்பெருமானுக்கும் நமக்குமிடையேயான தூரத்தைக் குறைத்து மிக நெருக்கமாக சேர்த்து வைத்தவர். அவர்தம் புகழைப் பாடி, அவரியற்றியருளிய இரு பிரபந்தங்களின் வழி நடந்து உய்வடைவோமாக.



# ஏழுமலை

**கலைமாமணி, டாக்டர். இளங்கம்பன்-பழனி.**

வாழும் நலமருளும வல்லவனே! ஓங்கியதாம்
ஏழுமலை வேந்தனே ஒன்றேதான்—ஆழன்பால
போற்றும அடியவர்கள் பொன்னான வாக்கில்ஒளி
ஏற்றுமே ஏழுமலை.

தாங்கும்நல் பேரருளைத் தண்ணமுதம் போல்வழங்கும்
வேங்கடவா என்றுநிதம விள்ளிடுவார்—நீங்காத
நற்றுணையாய் ஆகி நலமெல்லாம் நன்கருளி
பொற்பூட்டும் ஏழுமலை.

கிரிதரனே! கோவிந்தா கீர்த்தி மிகுந்த
விரிகமல உந்தியாய் என்றே—அரிய
மனத்தோடு போற்றுகின்ற மாண்புடையார் வாழ்வில்
தினந்தோன்றும் ஏழுமலை.

சந்ததமும் வேங்கடவன் சாற்றிய நாமத்தை
சிந்தையிலே வைத்தே சிறப்போர்க்கு—முந்தும்
பொருளோடு வையத்தில் பொன்றாப் புகழை
அருளுமே ஏழுமலை.

சீலம் தவம்நல்ல சிந்தனையைக் கொண்டேதான்
மாலவனே என்றே மகிழ்ந்திடவே—மேலும்
தழைக்கின்ற வாழ்வருள தானாக அன்பில்
அழைக்குமே ஏழுமலை.

# இரண்டு கண்கள்

திரு. கவிஞர். சோமசுந்தரப்பெருமாள,
தஙகவயல்.

இரணடு எனபது இனிமையுடைய சொல்மட்டுமனறு, எப்போதும் எவர்க்கும எநத நிலையிலும் சிந்தனையைத்தொடுகின்ற, தொட்டு உணமையின் உணாத்துகினற ஒப்புடையது எனபதே நாம் நோக்க வேணடியது ஆகும். ஆண பெண, இரவு பகல், சூரியன சநதிரன், இனபம் துனபம், இருள ஒளி, விண, மண, சக்தி சிவம், வெப்பம் குளிர்ச்சி எனறு நமக்கும் வாழ்க்கைககும் ஆதாரமாக இருககும் எதை எடுத்தாலும் அது இரண்டாகவே வருக்கப்பட்டு இருப்பதைக் காணலாம்.

ஒரு காகிதம் இரணடு பக்கங்களைக் கொணடு மிளிர்கிறது. ஒரே பக்கம் உள்ள காகிதத்தைக்காட்டமுடியுமா? முடியாது. ஆக இரண்டு ஒன்ருய்க காட்சி தருகிறது. நம் உடலை எடுத்துக்கொணடால் நாசி இரணடு, செவிகள் இரணடு, கைகள் இரண்டு, கால்கள் இரண்டு, கண்கள் இரணடு என்று முக்கிய உறுப்புகள் இரணடாகவே இறைவனுல் படைக்கப்பட்டுள்ளன. இந்த உறுப்புகள் எல்லாம் ஒவ்வொன்றும் வலது இடதுபுறமாக அமைநது இருப்பதும் நோகக வேண்டியது. இதில் வலது நல்லதா? இடது நல்லதா? இதில் எது அதிகம பயன்படுவது, பலன் தருவது என்று பகுப்பது எங்ஙனம? ஒரு பொருளைப் பாாக்கும் போது இரணடு கணகளும் ஒரே நேரத்தில் ஒரேமாதிரி செயல்படுவதால் நாம் பார்வையை சீராகப் பெற முடிகிறது. இதில எந்தககண அளவை அதிகமாகவும் எந்தக்கண் அளவில் குறைவாகவும் பார்வை ஈர்த்தது அல்லது தந்தது என்று தீர்மானிப்பது பொருந்தாதது ஆகும்.

நமது இந்து மதம் எனபது பெரிய தார்மீக சமயம். அதன் இரண்டு கணகளே சைவமும வைணவமும் ஆகும். காகிதத்தின் இரு பக்கங்கள் போல் நமது சனுதன தர்ம இந்து மதத்துக்கு அமைநத இரு பக்கங்களே சைவம வைணவம் ஆகும். எனவே இரணடு கண்களில் எது உயர்நதது? என்று எப்படிச்சொல்ல முடியாதோ? அப்படித்தான் வைணவம் உயர்ந்ததா சைவம் உயர்ந்ததா? என்று கூறமுடியாது. மனிதன் உயிர் வாழ வெப்பமும தேவை குளிர்ச்சியும் தேவை. இந்த இரணடில் எது கூடினுலும் ஆபத்து. குறைந்துபோனுலும் ஆபத்து. நமது இந்து மதத்துக்குள்ள வெப்பம் சைவம்! குளிர்ச்சி வைணவம ஆகும்.

இநத தத்துவததைப் புரியாத பல போகள் இன்னும் ஆங்காங்கே சமயப் பூசல்களுக்கு வித்திடுகின்றனர். அது தவறு மட்டுமல்ல நம்மை நாமே அழித்துக்கொள்ள நாம் போடும் மிகப்பெரிய கொடிய திட்டம் என்பதை உணர வேண்டும். மாலவன் உறைவது அலைகடல். சங்கரன் உறைவதுசுடுகாடு. ஒருவர் குளிர்ச்சியிலே மிதப்பவர், மற்றவர் நெருப்பிலே குதிப்பவர். இப்படி இருவரும் இருப்பதனுலே இவ்வுலகம் இயங்குகிறது. உலக இயக்கததில் உயிர் வாழ்கினறன.

> "வெயயாய் தணியாய் இயமானனும் விமலா
> பொயயாயின வெலலாம போயகல வந்தருளி
> மெய்யானமாகி மிளிர்கின்ற மெய்ச சுடரே"
>
> (சிவபுராணம்)

இறைவன் வெப்பமாகவும் குளிர்ச்சியாகவும் இருப்பவர் என்பதை மாணிக்கவாசகருடைய சிவபுராணம் செப்புகிறது. மனிதன் தினமும் தொடர்ந்து இருளிலோ அல்லது தொடர்நது ஒளியிலோ இருக்க முடியாது. இரண்டும் சமமாக தேவை. ஒளி உழைப்புக்கும் இருள் ஓய்வுக்கும் என்பது இறைவனுல் ஏற்படுத்தப்பட்ட நியதி.

> "சோதியனே துன்னிருளே
> தோன்றுப் பெருமையனே"
>
> (சிவபுராணம்)

எண்ணிறந்த பெருமைகளை உடைய இறைவன் இருள் ஆகவும், ஒளியாகவும் இருப்பவர். கணகளால் ஒளியையும் காண முடிகிறது. இருளையும் காண முடிகிறது. இதனை எப்படி உணர்வது? அதற்கும் விடை உண்டு.

> "கூர்த்த மெய்ஞ்ஞானத்தால்
> கொண்டுணர்வார் தங்கருத்தில்
> நோக்கரிய நோக்கே நுணுக்கரிய
> நுண்ணுணர்வே"
>
> (சிவபுராணம்)

நம்முடைய அறிவினுல் இந்த உண்மையை ஆய்ந்து கண்டுகொள்ளலாம் எனபதே கருத்து. இக்கருத்தினை பல பிரபநதப் பாடல்களும் செப்புகின்றன. அனைத்தும் எடுத்தாள முடியாமல் இங்கு விடப்படுகிறது.

எனவே நம் உயரிய இநது மதத்தின் இரணடு கணகளாக இருப்பவை வைணவமும, சைவமும் ஆகும். ஒரு கண்ணுல் மனிதனுக்கு எப்படி சிறப்பில்லையோ அப்படித்தான் ஒன்றினுல் மட்டும் இந்து மதத்துக்கு சிறப்பில்லை. ஒன்று குறைந்தோ கூடியோ இருப்பதும் தவறு. ஒன்று வளர்ந்தும் மற்றது வளராமல் இருப்பதும் நமக்கும் நமது மதத்துக்கும் ஆரோக்

கியமானது அல்ல என்றுதான் கூறத் தோன்றுகிறது.

இன்றைய தினம் மேல்நாட்டவர்கள் பலர் நமது இந்துமதத்தின சிறப்பை உணர்ந்து பின்பற்ற முனைந்துள்ளனர். இச்சூழ்நிலையில் நமக்குள் வைணவம் பெரிதா, சைவம பெரியதா என்ற சர்ச்சை தேவை தானா என்று சிந்தித்துப் பார்க்க வேணடும். அவவிரு சமயத்தையும் பரப்ப, மக்களிடை ஊன்றி வித்திடச் செய்ய வந்தவர்களே புண்ணிய புருசர்களான ஆழ்வார்களும், நாயன்மார்களும் ஆகும் என்பதை நாம சற்று நோக்க வேண்டும். இவர்கள் மக்களுக்கு சேவை செய்தும், இறைவனுக்கு தொண்டு செய்தும் தம்மை வழிகாட்டிகளாக—அறியாமை என்னும் இருளை அகறற வநத ஆதவனாக திகழ்ந்தனரே தவிர சாதாரண மானுட வாழ்ககையை யாரும் மேற்கொள்ளவில்லை என்பது தெளிவு. இப்படி வழிகாட்ட வந்த ஆழ்வார்களும், நாயன்மார்களும் அல்லது வேறு மகான்களும் தமது நூலில் சமயப்பூசல்கள் கிளரும்படி எவரும் கூறவில்லை. பேதம் ஏற்பட்டு அதனால் மக்களிடை சச்சரவினை யாரும் கிளறவும் இல்லை. என் பாதை எனக்கு. உன் பாதை உனக்கு எனறு கூறி இருக்கலாமே தவிர எந்தப்பாதை எவர் பாதை சிறந்தது என்று வாதிட்டுக்கொள்ளவில்லை.

இரணடு பாதைகள் ஒரே ஊரைச் சென்று அடைவது தவறு இல்லை. எபபடிப்போனாலும குறிப்பிட்ட ஊர் சென்று சேர முடியும். வித்தியாசம் தூரத்தில் இருக்கலாமே தவிர அடையும் இடத்தில் இருக்க முடியாது. அப்படிப பாதைகளால் வேறுபடாத சமய வழிகளால மாறுபாடு காண முடியாத பரமபொருள் ஆக இருப்பவரே இறைவன். அவரை அடையும் இரு வழிகளாக இருப்பவையே சைவம் வைணவம எனனும் இரு சமயங்கள் எனபதை கணடு தெளிய வேணடும.

சிவபெருமானுடைய அர்ச்சனையில் இடம்பெறும் நாராயண மந்திரங்களாவன:

ஓம் வரதாய நம ஓம பகவதே நம
ஓம் கிருஷ்ணாய நம: ஓம விஷ்ணவே நம.
ஓம ஹரியாய நம: ஓம அபிராமாய நம:
ஓம் க்ருஷ்ணவாணாய நம:

இப்படிப் பல நாராயண நாமங்களை கண்டு களிக்க முடியும்.

திருமால் அர்ச்சனையில் இடம்பெறும் சிவ மந்திரங்கள்:

ஓம சிவாய நம: ஓம ஈசாநாய நம:
ஓம் ஈஸவராய நம: ஓம் ஸர்வேஸவராய நம:
ஓம ருதராய நம:
ஓம் மகா தபஸே நம ஓம குஹாய நம.

(இப்படிப் பல நாமங்களைக் காண முடியும்).

ஆக இறைவர்களுக்குள்ளும் மநதிரங்களுககுள்ளும் பேதமில்லை, பேதமெல்லாம் மனிதர்களிடையே மட்டுமே என்பது வருநத வேணடிய ஒன்றாகும். சிவபெருமான பக்தர்கள் விரும்பும் உருவில், வேணடும் நிலையில அருள்புரிவேன என்கிறார். திருமால் நரனும் நானே நாரணனும நானே என்கிறார். கணணன சொனன கீதையில் 'நீ விரும்பும் பொருளாக, ஜெபிக்கும் மந்திரமாக, வணஙகும உருவமாக தேவதையாக நானே விளஙகுகிறேன்' என்று பகர்கிறார். எல்லாவற்றுக்கும மேலாய் துரியோதனன் சபையில், துரியோதனனிடம் கண்ணன் பலவாறு கூறுகிறார். உனனிலும எனனிலும பேதமில்லை. நீயும் நானும் ஒன்றே என்று சுமார் ஒரு நூறு பொருத்தங்களைக் கூறுகிறார்.

ஆழ்வார்கள், நாயன்மார்கள் தவிர இராமகிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகானந்தர், இராமலிங்க வள்ளலார், தாயுமானவர் போன்ற

பலர் இரண்டு சமயங்களையும் ஒரே நோக்கில் சமமாகக் கருதி போற்றி, புகழ்நது உரைத்து மகிழ்ந்தனர். இவர்களைத் தவிர சித்தாகள் எனப்படுவோர் மூலப்பரம் பொருள் பற்றியே கூறி அவற்றை அடையும் மாாககம் முதலியவற றைத் தத்தம் சித்திகளால வெளிப் படுத்தினா மக்களைக கவர்ந்தனா என்றுகூறுவதும் பொருந்தும். அது அவர்கள கண்ட வழி.

ஆனால் இவர்கள எல்லாரையும விட சுமாா 500 ஆண்டுகளுககு முன்பு பிறந்த ஒருவா காட்டிய பாதையே, சொனன வேதமே பேத மற்ற சம நோக்குடையது, உயா வானது என்று சொன்னல் அதைக காட்டிய புண்ணிய புருஷா ஸ்ரீஅருண கிரிநாதர் எனபதை நாம் மறுக்க முடியாது. இவரே சைவ வைணவ பூசலகளை வேரோடு களைய பாடு பட்டவா என்ற ஒன்று மட்டுமல்ல, இவர் எச்சமயத்தையும சாடாது, எதனையும புணபடுத்தாது, எதையும் விட்டுவிடாது கட்டி அணைத்தவர் என்ற பெருமையும் இவரையே சேரும்.

ஸ்ரீ அருணகிரிநாதர் பாடிய திருப் புகழ் முருகப்பெருமான் புகழ் பாடு வது எனறாலும், பெரும்பாண்மை யான பாடல்களில், நாரணன் மரு கனே! ஹரி மருகோனே, கேசவன் மெச்சும் மருகனே இப்படி அழைத்து மகிழ்வதைக் காணலாம். திருப்புக ழில் மகாபாரதம் உணடு, இராமா யணம் உண்டு, சக்தி வல்லமை உணடு, சிவபெருமான் திரிபுரம் எரித்த வரலாறு உணடு, முருகன் சூரனை அழித்த கதை உணடு, சூர பதமன் பெருமை உணடு, இராவ ணன் திறம உண்டு, சித்தாகள மரபு உணடு, பேய் பிசாசுகளபற்றி உணடு, தவமுனிவர்கள் அனுபவ ஞானம் உணடு, தவதைதப்பற்றி உணடு. தானத்தைப்பற்றி உணடு, நோய் நொடிபற்றி உண்டு, அவை களுக்குளள மருத்துவமும உணடு.

மநதிரவாதியின் செய்கைப்பற்றி உணடு. கோசத்தின பலன உணடு வேசியின செய்கை உணடு, கற்பரசி' களின கணிப்பு உணடு, மேம்பட்ட வர்கள் தனமைபறறி உணடு, கீழ்ப் பட்டவர்கள தனமை உணடு.

இப்படித் திருப்புகழில் சொல்லப படாத கருத்து ஏதாவது இருக் கிறதா என்று பாாத்தால் எளியே னுக்குஇல்லை எனறே தோனறுகிறது. இதனால ஸ்ரீ அருணகிரிநாதா சைவத் தையும வைணவத்தையும் போற்றிய வர் எனபதுமட்டுமல்ல. ஷண் மதத் தையும் பேணியவர் என்பதும் விளங் கும். பல பாடல்களில் சமயப் பூசல் கள் அறவே கூடாது என்றும் விளக்கு கிறார். ஏன்? அது நமக்கும நமது இந்து மதத்தினுடைய ஆரோக்கியத் துக்கும நல்லது அலல எனறு உணர்ந் ததால்.

நமக்கு முன்தோன்றிய மகான் களில இவரே இறைவனால் உபதேசம் பெற்றவர். எல்லா தெய்வங்களது அருளையும் பெற்றவர், எல்லா சித்தி களும கைவரப்பெற்றவர் என்றால் அது இவரது வேறுபாடற்ற பக்தி நெறியும் பக்குவமும் காரணம் என லாம். "எணணென்ப ஏனை எழுத்து என்ப இவ்விரணடும் கணணென்ப வாழும் உயிர்க்கு" என்பது வளளு வர் வாக்கு.

ஒரு மனிதனுக்கு இரண்டு கணகளாய் இருப்பன எண்ணும் எழுத்தும். அது போல் நமது வாழவுக்கும் சமய வழி பாட்டிற்கும் இரணடு கண்களாய் இருப்பது சைவமும் வைஷ்ணவமும் ஆகும். எண சைவம் என்றால, எழுத்து வைணவம் உயிர்சைவம்என்றாலஉடல் வைணவம். இப்படி ஒன்றுடன, ஒன்று ஒட்டிவந்தன. இவ்விரு சமயங்கள். இவைகள்நமதுஇரண்டுகணகள் ஆகும். இவ்விரண்டு கண்களையும் போற்றிப் பாதுகாப்பது நமது கடமை. இதை வலியுறுத்தி வழிகாட்டியவர் அருண கிரிநாதா. இவா பாடல்களின் முடிவு பெருமாளே என்று முடியும். பெருமை மிகுந்தவர் என்ற பொருள் இதற்கு இருந்தாலும், பொதுவாக மக்கள் மனதில் பெருமாள் என்றால் நாராயணனையே குறிப்பர். இது இயலபு. இதுவே ஸ்ரீ அருணகிரி நாதர் பக்திககும் அவரது பொது வழிபாட்டிற்கும் சூட்டிய வைரமுடி என்று கூறலாம். ஸ்ரீ அருணகிரி நாதரை வணங்கி, அவர் காட்டிய இரணடு கணகளைக காப்போம்.



(12-ஆம பககத தொடாசசி)

அழகுடைய கருடநதிக கரை தனனிலேவநது
அயிநதைநகா வந்து அமர்நததையா கப்பல்
ஏலேலோ விபுதேசா கோவிந்தா
ஏலேலோ குருராஜா.
உலகமெலலாம உய்நதிடவே—கோவிநதா
உயர்நாடு நாடிடவே
குருவரரின் ஆசசையுடன
விரைந்துவரும் கப்பலிது.

முடுகு

ரஹஸ்யத்ரய ஸாரததில சிலர்கணட சங்கைக்கு
விரோத பரிஹாரத்தை விரிவாகச் சொல்லி
கண்ணனிடம் அடைக்கலத்தால் கடனகளைக கழறறி
விண்ணவரின் அடிமையெல்லாம் மணணுலகில்
அடைந்து
வேதாந்த விசாரத்தை வெகுவாகச் செய்து
செவிக்கினிய செஞ்சொல்லாம பண்ணமரும
வேதத்தால்
பகதருடன் அனுதினமும் பல்லாணடுபாடி
அதுதனனையே அடியார்கள அனுஸநதிக்கக் கேட்டு
அயிநதையில அதிஸுகமாய் வசிதது வரும் நாளில்
தன்தாள நயந்தார்கசு தன்மை கொடுப்பேன் என்ற
தனனுடைய வார்த்தையை புவிதன்னிலும் காட்ட
அடியவர்க்கு மெய்யனும அடியவராம் குருவரரின்
அர்ச்சா விக்ரஹததை தன கோயிலிலே வைத்து
தன்னுடைய அர்ச்சைபோல் உத்ஸவங்களை நடதத
செங்கமலப் பாவையோடு களிப்புடனே அமரும்
தேவாதி நாதனுடைய திருவடியின்கீழே
ஸதய வாதியாய சோபித்து நிறகும்
வேதாந்த குரு என்னும் விந்தையான கப்பல்
மஹா மஹோபாத்ய யனும் நரஸிம்ஹதாஸன
மஹிமையாய் துதித்து தொழுது எழும் கப்பலிது
ஏலேலோ விபுதேசா கோவிந்தா
ஏலேலோ குருராஜா.

அனுப்பியவர் : திருமதி. ஆா. சந்திரா ராஜகோபால்.
மேட்டுப்பாளையம்.

# பக்தியும் பகவானும்

**திரு. ச. குணசேகரன்**
புதுடில்லி

'பக்தி' என்பது ஒருவகை யோகமாகும். மாயையிலிருந்து விடுபட யத்தனிககும புருஷன் பகதி யோகத்தினால் பகவானை ஆஸ்ரயம் செய்ய வேணடும் எனறு கண்ணபெருமான் அருளினார். முதலில் "பக்தி" பக்திக்காகவே பணணப்பட வேணடும்; "ப்ரம ப்ர்மையை ரூபம்" என்று சொல்லப்படுவது; இதில் ஒருவித லௌகீக பலன்களும் இச்சிக்கப்படக் கூடாது. "பக்தியின் பலன்" பரம பக்தியே; இதறகு தேக, மன அடக்கம், ஸர்வ ஆத்ம பாவனையினால் யாவரையும் சமமாகப் பார்ப்பது மிகவும் இன்றியமையாததாகும். மறற பலன்களுக்கு ஆசைப்பட்டுசசெய்யும் பக்தியானது "கல்விக்கு கைக்கூலி வாங்குவது போல" என்று நாரதர் பக்த ஸூத்திரத்தில் அருளிச் செய்திருக்கிறார்.

பக்தி எவ்விதம் உண்டாகும்? முதலில் யாரிடம் பக்தி செய்யப்பட வேணடுமோ அவன் பரம புருஷனாகவும், ஸர்வேஸ்வரனாகவும் இருக்க வேணடும். பெருமானிடம நம்பிககையும், அவர் நம்மை ஆபத்தில் காப்பாற்றுவார், மேலும் நம்மைக காப்பாற்றும் வல்லமை உள்ளவர் எனற மகாவிசுவாசமும ஏற்பட வேண்டும். இந்த மகா விசுவாசம் வரப்பெருமானால் அதுவே அம்ருதமாகும். யாகஞயவல்கியா மைத்ரேயிடம "பகவானே அம்ருதம், அவனைப் பூஜிப்பதால் நாமும அமிருதமாகி" விடலாம், எனறார். இவ்விதம பகதியானது அடையப்படுமானால் ஒருவன் பகவானிடம் தன்மயமாகி விடுகிறான். ஏனெனில் பகவானையே முழுவதும் நினைப்பதால், இந்த உலகமனைத்தும் வாசுதேவமயமாகப்பார்ப்பதால் திருடனுக்கும், யோகிக்கும் பொன்னுக்கும், கல்லுக்கும்யாதொரு வித்தியாசமும் கிடையாது. இதனை துளசிதாஸர், "சர்வ பிரபஞ்சத்தை சீதாராமமயமாகப பார்க்கிறேன, நான் சகலருககும அஞ்சலி செய்கிறேன" என்றார். பகவானிடம் சர்வ காரியங்களையும், அவைகளின் எலலா பலன்களையும் ஒப்புவிப்பதால் ஆசை நசிக்கப்பட்டு நிரோதம் ஏற்படுகிறது. அவைகளை 'ஈஸ்வரார்ப்பணம்' என்று சொல்லுவதால் பகவத் பக்தியேற்படுகிறது. ஆகவே பகவான் கீதையில் 'முக்குணங்கள் ஒருவனை சும்மாவிடாது. அவனை ஏவி காரியங்களில் பிரவிர்த்திக்கச் செய்யும். ஆனால் அவன் கர்மாக்களை "ஈஸ்வர ஆராதனம்" எனறு நம்பி கர்மாககளுககாக செய்பவனாகி, அதன் பலன்களையும் என்னுடைய சஙகலபத்திற்கு விடுவானாகில நாளடைவில் என்னிடம் பக்தியுள்ளவனாகிறான்" என்றார். பதஞ்சலி என்னும் யோக பாஷ்யம் எழுதிய முனிவாபெருமான் 'ராஜயோகம்' எனபதில்பகவானுக்கு கடமைப்பட்டு வாழ்தலே க்ரியயோகம், நியமயோகம என்றார். பகவானே சர்வ ரக்ஷகராகவும், பகவானே சர்வ பநதுவாகவும் விளஙகுகின்றான் என்ற நம்பிக்கை பக்தியுடன் விளங்க வரவேண்டும்.

சிற்றின்பங்களிலும் விஷயயோகங்களிலும் விடுதலை ஏற்பட்டு மனம ஒருநிலைப்படடு, ஆசை அடங்கி, பகவத் கிருபையை சேதனன நாடுகிறார். இதனை ஆழ்வார் அழகாக எடுத்து இயம்புகிறார். 'எனக்கு ஐந்து இநதிரியங்கள் பெரும் சத்துருககளாக விருக்கின்றனவே 'கஜேந்திரனுககு முதலை எனகிற ஒரு விரோதி, எனக்கு இவ்வைந்தும் விரோதிகள். யானை நோவு பட்டது ஆயிரம் வருஷம், நான் அநாதிகாலமாக ஸம்சாரததில் மூழ்கி நோவுபடுகிறேன ஆகவே என்னுடைய மீட்சி யானையை விட மிகப்பெரியது' என்றார். ராம கிருபை ஒன்றிலே மனோபக்குவம் பூர்ணமாக அடையக் கூடும்.

'அத்யாத்ம வித்யை' என்பது பக்தியோகம் என்னும் பகவானையே முழுவதுமாக எண்ணிஏற்படும் பகவத் காதலாகும். மகா விசுவாசத்தினாலே ஏற்படும்பகவத்காதலுக்கு 'பிரபத்தி' என்றும் 'சரணாகதி' என்றும சொல்லுவார்கள். கணணில்லாத குருடன போல, பகவான் விட்ட வழியே, பகவத் சங்கல்பத்திற்கு அனுசரணையாக வாழ்பவனே, நடநது செல்பவனே பக்தி பிரபன்னன்.

வாக்கையும், தேகத்தையும் பகவத் விஷயங்களுக்கு அர்ப்பணம் செய்து பகவானுடைய புணய கீர்த்திகளை கானம் செய்தும், பகவானுடைய ஸ்தலங்களுக்குப் போய் வணங்குதலும், பகவானுடைய பக்தர்களை எவ்விதத்திலும் நோகவைக்காமலும் மன அந்தரங்கத்துடன் செய்வதாலும 'மனசுத்தி', 'மனசாந்தி' ஏறபடும. இவ்விதமாக ஏற்படும மனதேக, வாக்கு, செய்கை, ஒற்றுமை, மனிதனை நாளடைவில் மனிதன பந்தங்களிலிருந்து விடுவிக்கச் செய்கிறது. இங்ஙனம் பகதியே யாவற்றிற்கும அடிப்படை. பக்தி யோகம், கர்ம, ஞான மார்க்கங்களை விடவும், இதரயோக மார்க்கங்களை விடவும் மேலானது. பக்தி மார்க்கம் ஆசரணைக்கு எனறு பகவானே பரதனைக் கராவலம்பனம் செய்தது மாதிரி தகுந்த சமயத்தில் உதவியை அளிக்கிறார். பக்தியினால அடையப்படும் பலன் பகவானேயாதலால், பகவானே உபாயம், பகவானே உபாயன் (பலன்) என்று ஆகிவிடுகிறார்.

இங்ஙனம் பக்தியால் பக்தன் பகவான் சமீபத்தில் இருக்கிறான். அங்ஙனம் பகவான் சமீபத்தில் இருப்பதால் சாமீப்ய, சாயுசசிய, சாரூப்ய, சாலோகய ஆனந்தங்களையும அடைகிறான்.

அகலகில்லேனிறையு மென்று
அலர்மேல
மங்கையுறை மார்பா
நிகரில் புகழாயுலகம் மூன்றுடையாய்
எனனை யாள்வானே
நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும்
திருவேஙகடத்தானே
புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்
கீழமர்ந்து புகுந்தேனே!

*(திருவாய்மொழி 6-10-10)*



# திருப்பாவையும் திருவெம்பாவையும்

திரு. டி. கேசவ ஐயங்கார்,
அல்லூர்.

*முன்னுரை :*

*சமீப காலமாக தமிழ் நாட்டில அநேகமாக எல்லா பாகங்களிலும், சிறிய, பெரிய கோயில்களிலும கூட மார்கழிமாதத்தொடக்கத்திலிருந்து, மாதம் முடியும் வரையிலும், தினந்தோறும் அதிகாலையில் திருபபாவையும், திருவெம்பாவையும் பாடப்பட்டு வருவதையும, ஒலிப்பெருககி மூலமாக இவைகளை இசைத்தட்டுகள் வாயிலாகவும் நாம் கேட்டு வருகிறோம். தவிர காஞ்சி கர்மாச்சார்யாளின் ஆசியுடன் அநேக இடங்களில் திருப்பாவை, திருவெம்பாவை மகாநாடுகள்கூட நடந்து வருவதை, தமிழ்மக்களாகிய நாம் அறிந்ததேயாகும். எனவே திருப்பாவையையும்திருவெம்பாவையையும் அனைவரும் அறியாதவர்களே இல்லை எனக்கூறலாம். தவிர முக்கியமாக சிறுவர், சிறுமியர் அனைவரும் இந்த இருபாவைப்பாட்டுகளையும், மனப்பாடமாகத் தெரிந்து இருக்க வேண்டும் என்பது, காஞ்சி பரமாச்சார்ய ஸ்வாமிகளின் அவா. அதற்காக இவைகளில் போட்டிகள் வைத்து, பரிசுகள் கொடுதது வருவதையும் நாம் அறிவோம்.*

*திருப்பாவைக்கும், திருவெம்பாவைக்கும் விளக்கங்கள் கொடுப்பது இக்கட்டுரையின் நோக்கமல்ல. ஆனல் இரு பாவைப்பாட்டுகளிலும் உள்ள பொருள் ஒற்றுமை, சொல் ஒற்றுமை, முக்கிய கருத்துக்களுடைய ஒற்றுமை, தவிர இவற்றிலுள்ள முக்ய வேற்றுமைகளையும் தொகுத்து எழுதுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.*

**பாவைப் பாட்டுகள :**

*திருப்பாவையை ஸ்ரீ ஆண்டாளும், திருவெம்பாவையை ஸ்ரீ மாணிக்கவாசகரும் இயற்றியுள்ளனர். திருப்பாவை ஸ்ரீவில்லிப்புத்தூரிலும், திருவெம்பாவை திருவண்ணமலையிலும் இயற்றப்பட்டதாகத் தெரிகிறது. ஆனல் சிலர் திருவெம்பாவை திருப்பெருந்துறை என்ற தலத்தில் தோன்றியதாகக் கூறுவதற்குச் சான்றுகள் இல்லை. திருவண்ணமலையில் இயற்றப்பட்டதற்கு சான்றாக திருவெம்பாவை 18ம் பாட்டு அமைந்துள்ளது.*

**வேறு சில பாவைப் பாட்டுகள் :**

*திருப்பாவை, திருவெம்பாவையைததவிர வேறு இருபாவைப் பாட்டுகள் இருந்ததாகத் தெரிகிறது. ஒன்று சமண முனிவர் ஒருவரால் இயற்றப்பட்ட பாவைப் பாட்டு அழிந்துபோய தற்சமயம் கிடைக்கவில்லை. மற்றது திரு தத்துவராய சுவாமிகளால் இயற்றப்பட்டது. இது முற்றிலும், மற்ற இருபாவைப் பாட்டினின்று மாறுபட்டு, முற்றிலும் வேதாந்த பரமாக உள்ளது என்பர்.*

**ஆண்டாள், மணிவாசகர் காலம் !**

*பொதுவாக ஆழ்வார்கள், நாயன்மார்களின் காலம் கி. பி. 4ம் நூற்றாண்டு முதல் கி. பி. 11ம் நூற்றாண்டு வரை என்பது அறிஞர்களின் கருத்து. இவர்களின் காலம்பற்றி அபிப்பிராய பேதங்களும் உண்டு. ஆண்டாளின் காலம் கி பி. 8ம் நூற்றாண்டு என்பர். ஆண்டாளும், மணிவாசகரும் சமகாலத்தவர்கள் என்று கருதுவோரும் உண்டு. ஆனல் ஆண்டாளின் காலத்தை ஆராய்ச்சிப் பேரறிஞரும், மகா வித்துவானுமான காலம் சென்ற உயர் திரு. மு. இராகவய்யங்கார், வான சாஸ்திர ஆராராய்ச்சியாளர்களின் உதவியுடனும், திருப்பாவை 13ம் பாசுரத்தில் 4வது அடியில் வரும் "வெள்ளியெழுந்து, வியாழன் உறங்கிற்று" என்ற ஆதி விசேஷமான சம்பவத்தை வைத்து ஆராய்ந்துள்ளார். இதன்படி சுக்ரன் (வெள்ளி) ஒரு புறம் உதயமாகுதலும், மறுபுறம் வியாழன் (குரு) அஸ்த்தமனம் (மறைவதும்) ஆயிற்று என்பதும் ஒரே சமயத்தில் நடந்த விசேஷ சம்பவமாகும். இந்த விசேஷ சம்பவத்தை வைத்து வான சாஸ்திர ஆராய்ச்சி நிபுணர்களின் உதவியுடன், எட்டாம் நூற்றாண்டில் எந்த எந்த ஆண்டுகளில் இம்மாதிரி நிகழ்ச்சிகள் நடைபெற்று இருக்க வேண்டும் என்பதை ஆராய்த்து, எட்டாம் நூற்றாண்டில் ஒரே தடவையாக கி. பி. 731ம் வருடம் டிசம்பர் மாதம் 18ந் தேதி அதிகாலை 3-30 முதல் 4 மணிக்குள் ஏற்பட்டிருக்கவேணும் என்று முடிவு கட்டியிருப்பதாக உயர் திரு. மு. இராகவய்யங்கார் கருதுவதாக, மறைந்த பிரபல தமிழ் அறிஞரும், பிரபல எழுத்தாளருமான உயர்திரு பி. ஸ்ரீ ஆசார்யா அவர்கள் எழுதியுள்ளார். அன்று மார்கழிப் பௌர்ணமி. அன்றே திருப்பாவை தோன்றியிருக்க வேணும் என்பது முடிவு. ஆண்டாள் ஸ்ரீரங்கத்தில் அழகிய மணவாளனுடன் கலந்தபோது ஆண்டாளுக்கு 15 வயது எனறும், எனவே ஸ்ரீ ஆண்டாள் கி.பி. 716ம் ஆணடு திருவாடிப்பூரத்தன்று தோன்றியிருக்கவேண்டும் என்பது ஆராய்ச்சியின் முடிவாகும் என்று ஆராய்ச்சிப்பேரறிஞரான திரு. ராகவய்யங்கார் கருதுவதாகவும் பி. ஸ்ரீ. எழுதியுள்ளார்.*

**பாவைப் பாட்டு என்பது யாது ?**

*பாவை என்ற சொல்லுக்கு பெண், கண்ணின் பாவை, பதுமை(பிரதிமை) சித்திரம் என்றபல பொருள்களுண்டு. மிகப்பழங்காலத்தில் நாட்டின் மழையின்மையால், வறட்சி ஏற்பட்டால் 5வயது முதல் 9 வயது வரை உள்ள*

சிறுமியர்கள், ஆற்றங்கரைகளில் அதி காலே நீராடி ஆற்றங்கரை களிலோ குளக்கரைகளிலோ மணலில் பதுமை பிடித்து, மழை பெய்ய வேண்டும் என்ற எண்ணத் தோடு பாடும் பாட்டிற்குப் பாவைப் பாட்டு என்று பெயர். நாடு செழித்து வளர வேண்டும், மக்கள் வாழும் வகையாக நிறைய மழை பெய்ய வேண்டும், தவிர தங்களுக்கு நல்ல கணவன்மார்கள் அமையப்பெற்று, நல்வாழ்வு வாழ வேண்டும் என்பதே பாவைப்பாட்டின் முக்கிய கருத்தும நோக்கமாகும. சங்ககால நூல்க ளான பரிபாடல், கலித்தொகை, நற் றிணை ஆகிய நூல்களிலும் பாவைப் பாடல்கள் பற்றியும், மார்கழி நீரா டல் பற்றியும் சான்றுகள் உள்ளன. தவிர இரு பாவைப் பாடல்களும் ஏலோர் எம்பாவாய் என்று முடிவுறு வதாலும் இதற்கு பாவைப் பாட்டு என்று வரலாயிறறு.

பாவை நோன்பும் மார்கழி நீராடலும் :

மிகப் பழங்காலத்தில் மாதங்களை சௌரமானம் என்ற சூரியனைக் கொண்டு கணக்கிடாமல், சாந்த்ரா யணம் என்ற சந்திரனைக் கொண்டு கணக்கிட்டு வந்தார்கள். "மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால் என்று திருப்பாவை தொடங்குவதி லிருந்து, முன்னாளில் மார்கழிமாதம், தை மாதம பௌர்ணமியோடு முடிவு பெற்றதாகத் தெரிகிறது. இதற்கு "பூர்ணிமாந்தம்" என்று பெயர். இம்முறையில் மார்கழி பௌர்ணமி யில் ஆரம்பித்து நடந்த நீராட்ட நோன்பை மார்கழி நீராடல், தை நீராடல் என்றும வழங்கிவந்துள்ளது. சித்திரை நட்சத்திரமும், பௌாணமி யும் கூடுவது சித்திரை மாதமாகும். விசாக நட்சத்திரமும் பௌர்ணமியும் கூடுவது வைகாசி மாதமாகும். இதே முறையிலேயே மிருகசீர்ஷ நட்சத்திர மும், பௌணமியும கூடுவது மாா கழி மாதமாகிறது. தவிர தை மாத முதல், ஆனி மாத வரையிலும் உத்த ராயணம் என்றும், இது, தேவர் களுக்கு பகல் கால ஆரம்பம் என்றும் ஆடி மாத முதல், மார்கழி வரை யிலும் தக்ஷிணயனம் என்றும் இது தேவர்களுக்கு இரவு காலம் என்றும் சொல்லப்படுகிறது. தவிர கீதையில் கண்ணன், 'மாஸானும் மார்கசீர்ஷோ கம்" என்று கூறியுள்ளான். அதா வது மாதங்களில் தான் மார்கழி மாத மாக இருப்பதாகக் கூறியுள்ளான். இதனால் மார்கழி மாதத்திற்கு ஏற்ற மாகிறது. தவிர "மாக்க சீர்ஷம்" என்ற சொல்லே, "மார்க்க, சீர்ஷம்" என்றுஇருசொற்களாகப் பிரிக்கலாம். அவ்விதம் பிரிக்கும்போது, மார்க்க என்பது வழி என்று பொருள். சீர்ஷம் என்றால் தலே என்று பொருள். அதா வது பகவானே அடைய பக்தியே தலே யான வழி என்றும் பொருள் கூற லாம். திங்கள் என்றால் சந்திரனேயும் மாதத்தையும் குறிக்கும் சொல் லாகும். கன்னட மொழியில் மாதத்தை திங்கள் என்றே குறிப்பிடு கிறார்கள். இந்த மார்கழி நீராடலே "அம்பா ஆடல்" என்றும் சொல்லப் பட்டுள்ளது. அம்பா என்பது "தாய்" உலகங்களுக்கெல்லாம் தாயாக இருக் கும் "அமபா" என்பது தேவியையும் குறிக்குமென்பர்.

மலேயாள நாட்டிலும் கூட பாவை நோன்பு வேறுவிதமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. அங்கு இது மார்கழி திருவாதிரைப் பெருவிழாவாக இளம் சிறுமியரால் கொண்டாடப்பட்டு வருகிறது. இம் மாதத்தில திருவாதிரைக்கு முன் ஒன்பது நாட்களும், அதிகாலேயிலேயே நீராடி, பக்திப் பாடல்கள் பாடியும், கைகளினலே தாளம்போட்டுக் கொண டும் பகவானைத் தொழுது கொண் டாடுகிறார்கள். இநத பாவை நோன்பு, வேத விதிகளில் கூறப்பட்ட வையன்று. ஆனல் "சிஷ்டாசார மாக" அதாவது முன்னேர்கள் தொன்று தொட்டு, அனுஷ்டித்து வந்ததாகத் தெரிகிறது. இதற்குச் சான்றாக திருப்பாவை 26ம் பாசுரத் தில் "மேலேயார் செய்வன வேண்டு வன கேட்டியேல்" என்று கூறியுள்ள தைக் காணலாம். தவிர "உய்யக் கொண்டார்" என்ற ஆசார்யரும் திருப்பாவைக்கு அருளிச் செய்துள்ள தனியனில் "சூடிக் கொடுத்த சுடர் கொடியே—தொல்பாவை" என்று அருளிச் செய்துள்ளார் (தொல் பாவை—மிக பழைய பாவை நோன்பு)

பாவை நோன்பிற்குச் சான்றுகள் :

இப்பாவை நோன்புபற்றியும், நீரா டல் பற்றியும் ஸ்ரீமத் பாகவதம், தசமஸ்கந்தம், 22ம் அத்யாயத்தில் கூறப்பட்டுள்ளது. இது ஹேமந்த ருதுவின் முதல் மாதமாகிய மார்கழி யில் பெண்கள் யமுனை நதியில் நீராடி நோன்பிருநதனர் என்றும், அதற்கு பாகவதத்தில், "காத்யாயனிவிரதம்" என்றும் பெயர் கொடுக்கப்பட் டுள்ளது. அப்போது அவர்கள் "காத்யாயனி மஹாமாயே, மஹா யோகின்யதீஸ்வரி, நந்தகோப சுதம் தேவி, பதிம்மே குருதே நம" என்று வழிபட்டதாக பாகவதம் கூறுகிறது. இதன் பொருளாவது: "காத்யாயினி ஹேமஹாமாயே மகாயோகி, ஈஸ் வரியே, உன்னைத் தொழுகிறோம். நந்தகோபர் மகனுகிய கண்ணனே எங் களுக்கு நாயகனுக அருள்புரிவாயாக" என்பதுதான். தவிர மேப்பத்தூர் ஸ்ரீ நாராயண பட்டத்ரி என்பவர் ஸ்ரீமத் பாகவதத்தின் ஸாரமாக, "ஸ்ரீ நாராயணீயம்" என்ற மஹா க்ரந்தத்திலும் இப்பாவை நோன்பு கூறப்பட்டுள்ளதாக பின்வரும் ஸ்லோகம் தெரிவிக்கிறது.

"மதனாதுர சேதஸோ அன்வஹம
பவதங்ரிதவய தாஸ்யகாமயா
யமுனா தடஸீம்னி ஸைகதீம்
தரலானியோ கிரிஜா ஸமார்ச்சிசந்"

இதன் பொருளாவது; ஹே குருவா யூரப்பா, உங்கள் பாத கமல சரணங் களை சேவிக்க வேண்டி தங்களிடம் ஆசை கொண்ட மனத்துடன் தினந் தோறும், அழகிய கணகளுடைய கோபிகைகள் யமுனை நதிக்கரையில் மண்ணினுல் செய்யப்பட்ட தேவியின் விக்ரஹத்தை பூஜிததார்களாமே"

எனக் கேட்க ஸ்ரீ குருவாயூரப்பனும் ஆமாம்'' என்று தலை அசைத்து ஆமோதித்தார் என்றும்,

"தவ நாம கதா ரதாஸமம்
ஸுத்ருசர்ப்ராதருபாகதா நதிம் |
உபஹாரசதர் பூஜயந் தயிதோ
நந்தஸுதோ பவேதிதி ''

அதாவது "ஹே குருவாயூரப்பா,தங்க ளுடைய நாம கதைகளை, ஆசை யுடன் கூறிக்கொண்டு, ஒன்று சேர்ந்து கோபிகைகள், காலையில் யமுனை நதி யில் நீராடிப் பழம், புஷ்பம் முதலிய உபகாரங்களைக் கொண்டு, நந்தகோப னுடைய புத்ரன், அவர்களுக்குக் கண வனாக வரவேணும், என்று பூஜிததார் களாமே'' எனக் கேட்க, ஸ்ரீ குருவா யூரப்பனும்'', 'ஆமாம்' என்று தலையை அசைத்து ஆமோதித்தாராம்.

ஒற்றுமைகளும வேற்றுமைகளும் :

திருப்பாவை முப்பது பாசுரங் களும், திருவெமபாவை 20 பாடல களும் 'ஏலோர் எம்பாவாய்' என்று முடிவது ஓர் ஒற்றுமையாகும். 'மார் கழித்திங்கள் மதிநிறைந்தநன்னாளால் என்று ஆரம்பிக்கிறது. இச் சொற் றொடர்கள் திருவெம்பாவையின் இறுதிப் பாட்டான "போற்றி அருளுக நின்...பாதமலர்'' என்பதில் கடைசி அடி "போற்றி யாம் மார்கழி நீராடேலார் எம்பாவாய்''என்று முடி வது கருத்து மற்றும் சொற்கள் ஒற்றுமையைக் குறிக்கிறது.

மார்கழி மாதத்தில் அதிகாலையில் இளஞ்சிறுமியா, கூட்டமாகச சென்று இறைவன் புகழ்பாடுவது, நீராடுவது, இரணடு பாவைப் பாட்டிலகளும் இடம் பெற்றுளளன என்பதும் ஒற் றுமையைக் குறிக்கும். திருப்பாவை யில் 6ம் பாசுரம் முதல் 15ம் பாசுரம் வரையிலும் உள்ளவை உறங்குபவர் களைத் துயிலெழுப்புவதாக அமைந் துள்ளதும்,திருவெம்பாவையில் முதல் 8 பாடல்களும் துயிலெழுப்புவதாக அமைந்திருப்பதும் ஒற்றுமையாகும். திருவெமபாவையில் முதல் பாட்டில் உறக்கத்திலிருந்து எழுந்திருக்காத வளைப்பற்றி மூன்றும் அடியில் கூறும் "மாதே வளருதியோ, வன் செவியோ நின் செவிதான்'' அதாவது உன் காதுதான செவிடோ என்று கேட் பதை, திருப்பாவையின் 9வது பாசு ரத்தில், "ஊமையோ அன்றிச் செவிடோ'', என்றிருப்பது மிகப் பொருத்தமான ஒற்றுமையாகும். திருவெம்பாவையில் 4வது பாட்டில் காணப்படும், "வண்ணக்கிளி மொழி யாள் எல்லோரும் வந்தாரோ'' என்ப தற்கு இணையாக, திருப்பாவையின் 15 வது பாசுரமான, "எலலே இளங் கிளியே'' என்ற பாசுரத்தில் ஒற்று மையை நன்கு காணலாம். தவிர திரு வெம்பாவையில் துயில் எழுப்புபவர் களை பார்த்து, "கிளிமொழியாள்'' என்கின்றனர். ஆனுல் திருப்பாவை யில் உறங்குபவளைப் பார்த்து துயில் எழுப்பும் பெண்கள், "எல்லே இளங் கிளியே'' என்பது எவ்வளவு பொருத் தமாய் அமைந்துள்ளதென்பதை வாசகர்கள் நன்கு அறியலாகும். இதே பாட்டில் (திருவெம்பாவை 4வது பாட்டு) "எல்லோரும் வந் தாரோ எண்ணிக்................. சொல்லுவோம்'' என்றிருப்பது திருப் பாவையில் 15ம் பாசுரத்தில் "எல் லோரும் போந்தாரோ? போந்தார் போந்தெண்ணிக்கொள்'' என்று அமைந்திருப்பது, கருத்து ஒற்றுமை யும, சொற்கள் ஒற்றுமையும் எவ்வ ளவு அழகாயும் பொருத்தமாயும் ஒத் திருப்பது நன்கு தெரியும். திருவெம் பாவையின் 4ம் பாட்டில், 'கண்ணுக் கினியானை பாடி'' என்று சிவபெரு மானைக் குறிப்பதுபோல், திருப்பாவை 12ம் பாசுரத்தில், "மனதுக்கினி யானை பாடவும்'' என்று திருமாலைக் குறிப்பதும் பொருத்தமான ஒற்றுமை ஆகும். தவிர திருவெம்பாவையில் வரும் "கோழி கூவுதல், குருகு கூவு தல் வெண் சங்கின் நாதம் கேட்டல், ஈதென்ன உறக்கமோ, ஆழியான், ஊழி முதல்வனாய்', போன்ற சொற்க ளெல்லாம், திருப்பாவையில், 4,6,12 முதலிய பாசுரங்களில் உள்ள சொற் களுக்கு ஒத்திருப்பதும், பொருளும் கூட ஒத்திருப்பதும் சிறப்பாகும். திருப்பாவையில் பொழுது விடிந்து விட்டதை 6, 7, 8ம் பாசுரங்களில் (புள்ளும் சிலம்பினகாண், கீசு கீசு



என்று, கீழ் வானம் வெள்ளென்று) தெரிவிப்பதை திருவெம்பாவை 8ம் பாடலில் காண்பது நல்ல ஒற்றுமையாகும். திருவெம்பாவை 9ம் பாடலான, "முன்னைப் பழம்பொருட்கும்" எனத் தொடங்கும் பாட்டில் உள்ள கருத்துக்கள், திருப்பாவையின் 29ம் பாசுரமான, "சிற்றஞ் சிறுகாலே" பாசுரத்தில் நன்கு ஒலித்திருப்பது பொருத்தமான ஒற்றுமைகளாகும். திருப்பாவையில் மழைப் பாட்டாக 3ம், 4ம் பாசுரம் அமைந்திருப்பதும், திருவெம்பாவையின் 16ம் பாடல் மழைப்பாட்டாக அமைந்திருப்பது நல்ல ஒற்றுமையாகும். திருவெம்பாவையில் மணிவாசகர் மின்னலுக்கு உபமானமாக உமா தேவியின் இடையைக் குறிப்பிடுகிறார். ஆண்டாள் திருமாலின் சக்ராயுதத்தை, மின்னலுக்கு உபமானமாகக் கூறுகிறாள். மணிவாசகரின் 8ம் பாட்டில் "கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்" என்று கூறியுள்ள வாக்கியங்களுக்கு ஒப்பிடும் வகையில் திருப்பாவையில் 18ம் பாசுரத்தில் "வந்தெங்கும் கோழி அழைத்தன காண், மாதவிப் பந்தல் மேல் பல்கால் குயிலினங்கள் கூவின காண்" என்ற ஆண்டாள் வாக்கை ஒத்திருப்பது கருத்தும், ஒற்றுமையாக இருப்பதும் காணத் தக்கதாகும். இதேபாசுரத்தில் வரும் 'கந்தம் கமழும் குழலீ' (மணம் கமழ்கின்ற கூந்தலை உடைய) என்ற வாக்கியம், திருவெம்பாவையில் 17ம் பாட்டில், "கொங்கு உன் கருங்குழலி" என்ற சொற்களுக்கு இணையாக அமைந்திருப்பதைக் காட்டுகிறது. திருவெம்பாவையின் இறுதிப் பாட்டு, "போற்றி அருளுக நின் ஆதியாம் பாதமலர்" என்ற போற்றிப் பாட்டு' திருப்பாவையின் 24ம் பாசுரமான, 'அன்றிவ்வுலகளந்தாய் அடி போற்றி', என்ற பாட்டுடன் ஒப்பிடலாம்.

**வேற்றுமைகள் :**

திருப்பாவை திருமாலை தெய்வமாகவும், திருவெம்பாவை சிவபெருமானை தெய்வமாகவும் வழிபடுகின்றன. திருப்பாவையில் சொல்லப்படும் நோன்பைப்பற்றி திருவெம்பாவையில் எங்கும் கூறப்படவில்லை. தவிர திருப்பாவை 2ம் பாட்டான, "வையத்து வாழ்வீர்காள்" என்ற பாசுரத்தில் நோன்பிற்குரிய நியமங்கள் கூறப்பட்டுள்ளதுபோல் திருவெம்பாவையில் நியமங்கள் ஏதும்கூறப்படவில்லை. நோன்புக்கு உபகரணமாக பறை என்ற வாத்தியம், சங்கு, பல்லாண்டு பாடுவோர், விளக்கு, கொடி, விதானம் போன்றவை தேவை என்று திருப்பாவையில் பேசப்படுகிறது. ஆனால் திருவெம்பாவையில் உபகரணங்களைப்பற்றிப் ப்ரஸ்தாபமே கிடையாது. அதேபோல் நோன்பை முடித்ததற்கு அடையாளமாக திருப்பாவையின் 27ம் பாசுரம் "கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா" என்ற பாசுரத்தில், 2ம் பாசுரத்தில் கூறிய நியமங்களைவிட்டு, புதிய ஆடை உடுத்தி, பல அணிகலன்களை அணிந்து, நிறைய நெய்விட்டு, பாற்சோறு (சர்க்கரைப் பொங்கல்) எல்லாரும் கூடி இருந்து உண்பதாக அமைந்துள்ளதுபோல், திருவெம்பாவையில் கூறப்படவில்லை.

முடிவுரை :

திருப்பாவையும், திருவெம்பாவையும் வெவ்வேறு தெய்வச் சார்புடையதாயினும், ஒரே பொதுக் கருத்தை கொண்டதாக உள்ளன. இறைவனின் வாடாத திருவடிக்கு, வாடாத பாமாலையாக 30 பாக்களை ஒரு பொக்கிஷமாக ஆண்டாள் அளித்துள்ளாள். மணிவாசகரும் பக்திப் காதலின் தோற்றமாக வாடாத பாமாலையாக 20 பாக்களைப் புதையல்போல் கொடுத்துள்ளார். திருப்பாவையும் திருவெம்பாவையும் பிரபலமாவதற்கு முக்கிய காரணம் காஞ்சிபரமாசார்யாள்தான் என்றால் அது மிகையாகாது. தவிர இவ்விரு பாவைப் பாட்டுகளும் கடல் கடந்து, தாய்லாந்து, சுமத்ரா ஜாவா, கம்போடியா போன்ற அயல் நாடுகளிலும் பரவியிருந்தது என்பதற்கு அந்நாடுகளில் நடக்கும் முக்கியச் சடங்குகளில் பாவை பாட்டுகள் பாடப்பட்டு வருவதே சான்றாகும்.

எனவே பக்திக் காதலில் விளைந்த திருப்பாவையும், திருவெம்பாவையும், மார்கழி மாதத்தில் மட்டுமின்றி எல்லா நாட்களிலும், புனித நீராடி நாம் எல்லோரும் பாவைப் பாட்டுக்களைப் பாடி இறைவன் அருளுக்கு பாத்திரமாவதற்கு முயல்வோமாக.



## விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூலமாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில் எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறாதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க்கடிதத்தில் மணியார்டர் எண்,செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண்டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

— ஆசிரியர்.

# இலக்கியத்தில் கார்த்திகை தீபம்

தீபவழிபாட்டை எல்லா மதத்தினரும் வழிபட்டு வருகின்றனர். மங்கள நிகழ்ச்சிகளை முதலில் விளக்கேற்றியே தொடக்கி வைப்பர். இதன்மூலம் அறிவது யாதெனில் ஜோதியை வணங்கிய பின்பே மற்ற செயல்களைச் செய்வது நமது மரபாகக் கொள்ளப்படுகிறது. காடுகளில் மிருகங்களைப் போல் வாழ்ந்த மனிதர்கள் தீயைக் கண்டுபிடித்த பின்புதான் மனித நாகரிகப் பாதையில் வாழத் தொடங்கினர். அன்று முதல் மக்கள் தீபத்தை வணங்கி வருகின்றனர். விளகு என்பதற்கு 'இருளை விலக்கு' என்று பொருள். அத்தகைய விளக்கை நாம் வணங்கும் போது நமது மன இருள் அகன்று தூய்மை அடையும் என்பது உண்மை. இவ்விளக்கை நாள்தோறும் வீட்டில் ஏற்றினாலும், விளக்கினைச் சிறப்பாகக் கொண்டாடும் விழாவே கார்த்திகை தீப விழா ஆகும்.

இந்து மக்கள் ஒவ்வொரு மாதத்திலும் ஒவ்வொரு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர். அம்முறையில் கார்த்திகைத் திங்களில், கார்த்திகை நட்சத்திரமும், முழுமதியும் கூடிய நாளில் வீட்டின் முற்றத்தில் தீபங்களை ஏற்றுவதால் அதனைக் 'கார்த்திகை தீபம்' என்பர். இவ்விழாவை சைவர் வைணவர் வேறுபாடு இன்றி மிகச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். கார்த்திகை தீப விழாக் கொண்டாடுவதற்குப் புராணம் கூறும் கருத்தாவது:(கதை)

முன்னொரு சமயம் மூன்று அரக்கர்கள் வானத்தில் திரிபுரங்களாகத் திரிந்து வந்தனர். அவர்கள் தாங்கள் எண்ணியவாறு மக்களைக் கொன்று வந்தனர். இத்துன்பத்தைப் போக்க சிவபெருமான் அம்மூன்று அரக்கர்களைப் பார்த்துச் சிரித்த அளவிலே மூன்று கோட்டைகளும் எரிந்து சாம்பலாகின. அந்நாள் கார்த்திகை மாத பௌர்ணமி ஆகும். மக்களின் துயரத்தைத் துடைத்த சிவபெருமானை எண்ணிக்கொண்டாடும் விழா இதுவே ஆகும்.

சிவபெருமான் கார்த்திகைமாதம் பௌர்ணமி அன்று திருவண்ணாமலையில் ஜோதியாகக் காட்சி அளித்தார். எனவே ஆண்டுதோறும் அந்நாளை நினைக்கும் வண்ணம் விளக்கு ஏற்றி 'ஜோதி' வடிவிலே சிவனை வணங்குகின்றனர்.

இறையருள் பெற்றச் சமய சான்றோர்கள் சிவனை ஒளி வடிவிலே கண்டுள்ளனர் என்பதை அவர்கள் பாடிய பாடல்கள் வழியாக அறியலாம்.

சம்பந்தர் :

" சோதி அந்தம் ஆயினும்
சோதியுள் ஒரு சோதியானும்
—என்றும்

நாவுக்கரசர் :

" ஞானச்சுடர் விளக்காய் நின்றவன்
விறகிற் தீயினன் பாலிற்படுநெய்யோன்
மறைய நின்றுளான் மாமணிச்
சோதியான் ',
—என்றும்

மாணிக்கவாசகர் :

" தூண்டா விளக்கின் சுடர்சுவையார்"
என்றும் ஒளியே சிவம் என்று பாடுகின்றனர்.

கார்த்திகை தீப விழா என்பது தமிழர்கள் தொன்று தொட்டுக் கொண்டாடி வருகின்ற ஒரு பழமையான விழாவாகும். ஞான சம்பந்தர் அங்கம்பூம்பாவைக்குப் புத்துயிர் அளிக்க சிவனை நோக்கிப் பாடிய பதிகத்தில் மக்கள் கொண்டாடும் பல விழாக்களைக் காணாமல் போய் விட்டாயே என்று பாடும் போது "தொல் கார்த்திகை"யையும் காணவில்லையே என்று பாடுகிறார். கார்த்திகையின் பழமையினை மனதில் கொண்டே "தொல்கார்த்திகை" என்று கூறுகின்றார்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க இலக்கியங்களின் வாயிலாக அக்கால மக்கள் கார்த்திகை தீப விழாவை எந்நாளில், எவ்விடங்களில், எம்முறைகளில் கொண்டாடினர் என்பதற்குச் சான்றுகள் பலவற்றைக் காணலாம்.

கார்த்திகை என்பதற்கு 'அழல்' என்றும் "பரி" என்றும் பெயர்கள் உண்டு.

"அழல் சேர்குட்டம்"
என்று சிலம்பும்,
" எரிகடை எழில் வேழம்"

என்று பரிபாடலும் கூறுகின்றன. 'எரி' என்பதற்குப் பரிமேழலகர் கூறும் விளக்கம் 'அங்கியைத் தெய்வமாக உடையகார்த்திகை' என்று பொருள் கூறுகிறார். கார்த்திகை விழாவினைப் "பெருவிழா" என்றும் 'கார்த்திகை சாறு' என்றும் தமிழ் இலக்கியங்கள் பகர்கின்றன.

திரு. K. M. பாபுஜி, M.A., M.Phil.,
திருப்பதி.

கார்த்திகைத் திங்களில் கார்த்திகை நட்சத்திரமும் முழு மதியும் கூடிய நாளன்றே 'கார்த்திகை தீப விழா' வருகின்றது என்பதை அகநானூற்றுப் பாடல் ஒன்றில் நக்கீரர் பின்வருமாறு கூறுகின்றார்.

" மழைகால் நீங்கிய மாக விசும்பில்
குறுமுயல் மறுநிறம் கிளர
மதிநிறைந்து

(47-ம் பக்கம் பார்க்க)

# பாவையின் பெருமை

மார்கழி மாதம் மிகவும் சர்வோத்தரமான காலம். தேவதைகளுடைய பகலுக்கு வைகறை. மானிடர்களுடைய உத்தராயணத்துக்கு முற்பட்ட மாதம். பெண்கள் விடியற் காலையில் எழுந்திருந்து வாசலைப் பெருக்கி, வர்ண வர்ணப் பொடிகளால் கோலங்கள் போட்டு வீதியை அழகுபடுத்தி விளக்கு ஏற்றி வைக்கிறார்கள். ஆலயங்களில் திருப்பள்ளியெழுச்சி ஆராதனத்தின் மணியோசை கேட்கிறது. தமிழ் நாடெங்கும் சிறுவர்களும், சிறுமியர்களும் கூட சிற்றஞ்சிறு காலையில் எழுந்து, நீராடித் திலகமிட்டுக்கொண்டு சூடிக்கொடுத்த சுடர்க்கொடி ஆண்டாள் அருளிச் செய்த 'மார்கழித் திங்கள்'' என்று தொடங்கும் திருப்பாவைப் பாசுரங்களைப் பாடும் இன்னிசை கேட்கிறது. இவ்விதமாக ஆண்டாள் பாடப்போகும் மாதம் என்பதாலேயே கீதாசார்யனான ஸ்ரீ கிருஷ்ணன் அதில் ஓர் ஆசையோடு "மாதங்களில் மார்கழியாகிறேன் நான்'' என்று பாடுகிறான் போலும். திருப்பாவையில் முப்பது பாட்டுக்களையும்மார்கழி முப்பது நாட்களிலும் தினம் ஒரு பாட்டாக அனுஸந்தித்து எல்லோரும் உள்ளம் குளிர்கிறார்கள். இப்போது ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்த கோதா ஸ்துதியாவது:

**ஸ்ரீ விஷ்ணு சித்த குல நந்தன கல்பவல்லிம்**
**ஸ்ரீ ரங்கராஜ ஹரி சந்தன யோக த்ருச்யாம்**
**ஸாக்ஷாத் க்ஷமாம் கருணயா கமலாம் இவந்யாம்**
**கோதாம் அனன்ய சரண: சரணம் ப்ரபத்யே.**

ஸ்ரீ விஷ்ணு - சித்த குல நந்தன வனத்துக்கு ஒரு கல்பகக் கொடியாய் "கோல் தேடி ஓடும் கொழுந்ததே போன்றதே மால் தேடியோடும் மனம்'' என்று அருளிச் செய்தபடியே ஸ்ரீ ரங்கராஜனாகிய சந்தன விருக்ஷத்தை நாடி அடைந்து விளங்குபவளும், பொறுமையில் ஸாக்ஷாத் பூமியாய், கருணையில் மற்றொரு மஹாலக்ஷ்மி போன்றவளுமான கோதையை புகலொன்றில்லா அடியேனே சரணமாக அடைகின்றேன் என்பது ஸ்லோகம். கோதையோடு சம்பந்தம் பெற்ற எல்லா வஸ்துக்களும் மேன்மையை அடைந்து உலகுக்கு மங்களகரமாக ஆகின்றன. அவள் உதித்த திசை, அவதரித்த குலம், அவளை வளர்த்த பிதா, அவள்பெயர், உடுத்திய ஆடை, சூடியமாலை, மாலையின் புஷ்பவாசனை, புஷ்பத்தில்வட்டமிடும் வண்டு, பகவான் எல்லாமே மகிமை பொருந்தியன.

பொதுவாக சுபகார்யங்களுக்குத் தவிர்க்க வேண்டியதாகக் கூறப்படும் தெற்கு திக்கு, ஆண்டாள் அவதரித்த ஸ்ரீ வில்லிபுத்தூர் தெற்கேயிருப்பதால், ஸர்வோத்தரமாய் பெருமையுள்ளதாயிற்று. அதனாலேயே அரங்க நகரில் கடல் நிறக்கடவுளான அழகிய மணவாளன் வடதிசை பின்பு காட்டித் தென்திசை நோக்கியே அரவணையில் துயிலமர்ந்து இருக்கிறான்.

ஸ்ரீமந்நாராயணனே பரதத்வம் என்று வித்வத் சபையில் நிர்த்தாரணம் செய்து, பாண்டிய மன்னரால் கொண்டாடப்பட்ட ஸ்ரீ விஷ்ணுசித்தர், கண்ணன் பிள்ளைத் தமிழாக பல நூறுபாட்டுக்களைப்பாடினாலும்,தான் பெற்றப்பெண்ணான ஆண்டாள் சூடிக் கொடுத்தப் பூ மாலையை எம்பெருமானுக்கு சமர்ப்பித்ததாலேயே 'பெரியாழ்வார்' என்று போற்றப் படும் மிகப் பெரிய பாக்யத்தைப் பெற்றார். பெண்ணாகப் பிறந்த ஆண்டாள் புருஷோத்தமனான அரங்கனைக் காதலித்து, அவனோடு கூடியிருந்து மகிழ்ந்தும், பிரிந்து வருந்தியும் பட்ட அனுபவங்களை புருஷர்களாகப் பிறந்த மற்ற ஆழ்வார்கள், தங்கள் பக்தியைக் காதலாக மாற்றி, சுகதுக்கங்களாக, பகவத் ஸம்யோக வியோகத்தால் அனுபவித்து அருளிச் செய்கிறார்கள். ஆழ்வார்களுக்கும் ஆண்டாள் வழிகாட்டியாகிறாள்.

**திரு. எஸ். இராமசாமி,**
**மதுரை-11.**

விருத்த கங்கை என்று போற்றப் படும்புண்யநதியான கோதாவரியோடு புண்ய காலஙகளில் கங்கை முதலிய மற்ற நதிகள் சேர்ந்து, தங்கள் பாபங்களைப் போக்கிப் பரிசுத்தமாகின்றன. இதற்குக் காரணம் கோதாதேவியின் பெயரையுடையதாக கோதாவரி இருப்பதே. வைஜயந்தி எனும் வனமாலைக்கு ஸ்தானம் எம்பெருமானின் திருமார்பே. ஆனால் சூடிக்கொடுத்த மாலையோ அதற்குமேல் ஒருபடி ஏறி அவன் சிரஸ்ஸிலேயே இருக்கிறது. ஆண்டாள் அளித்த மாலையும், உடுத்திக் களைந்து கொடுத்த ஆடையும் பெற்று எம்பெருமான் ஜகத்துக்கே ஈஸ்வரனாக முடிசூடப்பெற்ற ஸார்வ பௌமன்போல் விளங்குகிறான். இங்கு மணவாளனாக அரங்கனுக்கும், மணமகளான ஆண்டாளுக்கும் மாலை மாற்று உற்சவம் நடக்கிறது. அழகிய மணவாளன் தம் தாமரைக் கண்களால் கமல மலர் மாலையை ஆண்டாளுக்கு அணிவிக்கிறான். இதை சேவித்து நிற்கும் அடியார்களுக்குள் இப்போது திருவுக்கும் திருவாகிய ஸ்ரீய:பதி பெரியவனா? அல்லது திருமாலின் திருவான

விஷ்ணு பத்னி பெரியவளா? என்ற சொற்போர் நடக்கிறது. அரங்கன் அடியார்கள் 'அரங்கனே பெரியவன்' என்று ஸ்தாபிக்க ஆரம்பித்து, ஆண்டாளின் பெருமைகளையே எடுத்துரைக்கிறார்கள். ஆண்டாள் குழுவினர் 'ஆண்டாள் பெரியவள்' என்று ஸ்தாபிக்கிறோம் என்று சொல்லி அரங்கன் பெருமைகளையே உத்கோஷிக்கிறார்கள். திவ்ய தம்பதிகளோ வாயார மனமார அவர்கள் கூறும் தம் பெருமைகளைக் கேட்டு, மக்கள் மழலைச் சொல் கேட்டு மகிழும் பெற்றோர் போல ஒருவரையொருவர் கடைக் கண்களால் நோக்கிக் கொண்டு மனம் மகிழ்கிறார்கள்.

சூதனாய்க் கள்வனாய்த் தூர்த்தரோடிசைந்த காலம், மாதரார் கயல்கண் வலையுள் பட்டிருக்கும் நம்போன்றவர்கள் விஷயத்தில் ஆண்டாள் செய்யும் உபகாரம் மிகப்பெரியது. நாம் பாவமே செய்து பாவியானோம் என்று இருந்தாலும் ஆண்டாள் தன் பூமாலையால் எம்பெருமான் திருமேனியைக் கட்டியும், பாமாலையால் உள்ளத்தைக் கொள்ளை கொண்டும், நம் பாபங்களில் கண்ணைச் செலுத்த விடாது, அவன் கருணையையே பெருக்கி நம்மை ரக்ஷிக்கும்படி செய்கிறாள். இன்னமும் நம் வரம்பு மீறிய செய்கைகளைக் கண்டு நாம் அவனை அணுகும்போது அவன் வெகுண்டு முகத்தை மாற வைக்கலாம் என்று நினைத்தாலும் அவனால் அது செய்ய முடியவில்லை. ஏனெனில், வலப்பக்கத்தில் பெரிய பிராட்டியார் இருந்து கொண்டு, 'இவ்வுலகில் பாபம் செய்யாதவர் யார்? ஸ்வாமி! ஆர்யனாக இருந்தால் கருணையல்லவா செய்ய வேண்டும்' என்று நமக்காக பரிந்து பேசுகிறாள். இதைக் காதில் வாங்காமல் வேறு பக்கம் திரும்புவோம் என்றால் இடப்பக்கத்தில் இருக்கும் ஆண்டாள் தன் மாய மயக்குகளால் மயக்கி, பாபம் என்று ஒரு வஸ்து இருப்பதாகவே நினைக்க முடியாதபடி செய்து விடுகிறாள். இனி இருபுறமும் திரும்ப முடியாமல் நேராக நம்மை நோக்கி தர்ம பராதீனர்களான நம்மேல் இரக்கம் கொண்டு பகவான் நம் ரக்ஷணத்தையே செய்துவிடுகிறான். அபராதம் செய்தவர்களை ரக்ஷிப்பது ஜகன்மாதாவான கோதையின் ஸ்வபாவத்துக்குப் பொருத்தமானதே. எப்படியென்றால் பால் குடிக்கும் குழந்தை ஸ்தனத்தைக் கடித்துவிட்டால் வத்ஸலையான தாய் குழந்தையைத் தள்ளிவிடாமல் அதன்மேல் இரக்கம் கொண்டு மேலும் பால் கொடுத்து அதை வளர்ப்பது என்பது நமது லோகத்தில் காண்பது தானே. ★

---

(45 ம் பக்கத் தொடர்ச்சி)

ஆறுமீன் சேரும் அகலிருள் நடுநாள்
மறுகுவிளக் குறுத்து மாலைதூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலவுடன்துவன்றிய
விழவுடன் அயர வருகதில் அம்மா''

கார்த்திகை விளக்கில் பஞ்சை திரியாகத் திரித்துப் போட்டு விளக்கேற்றினர் என்பதைக் குறுந்தொகை 353 வது பாடல்,

"பஞ்சு வெண்திரிச் செஞ்சுடர்"

என்று கூறுகிறது கார்த்திகை தீபத்தில் நெய்யை ஊற்றி வீட்டின் முற்றத்தில் விளக்கு ஏற்றினர். விளக்கின் ஒளியைக் கண்ட கவிஞர் போர்களத்தில் அம்புகளால் பாய்ந்த போர் வீரன் உடம்பில் இருந்து பீறிட்டு வரும் இரத்தம் போன்று இருந்தது என்று ஒப்புமைக் கூறும் அளவிற்குக் கார்த்திகை தீபம் சிறந்து விளங்கியது. அகநானூற்றில் 17 வது பாடலில் நெய் ஊற்றி ஏற்றிய கார்த்திகை விளக்கின் சுடர் விழுவது காற்றடிக்கும் போது இலவமரத்தில் இருந்து உதிரும் பூக்கள் போன்று இருந்தன என்பதை,

'' நீளரை இலவத் தூழ்கழி பன்மலர்
விழவுத் தலைக்கொண்ட பழவிறல்
மூதூர்
நெய்யுமிழ் சுடரில் கால்பொரச் சில்கி
வைகுறு மீனில் தோன்றும்''

என்று கூறுகிறார் கயமனார்.

பண்டையத் தமிழர் கார்த்திகை தீபம் விழாவினைப் பல நாட்கள் ஏற்றிக் கொண்டாடினர் என்பதைக் கார் நாற்பது என்ற இலக்கியத்தின் வாயிலாக அறியலாம்.

'' நலமிகு கார்த்திகை நாட்டவர்
இட்ட தலைநாள் விளக்கில் ''

இப்பாடலில் 'தலைநாள்விளக்கு' என்பதில் கார்த்திகை விளக்கைப் பல நாட்கள் ஏற்றினர் என்பது தெளிவாகிறது. கார்த்திகை மாதம் முழுவதும் மாலை வேளையில் வீட்டின் முற்றத்தில் விளக்கேற்ற வேண்டும். அவ்வாறு ஏற்ற இயலாதவர் துவாதசி, சதுர்த்தசி, பௌர்ணமி ஆகிய இம்மூன்று நாட்களாவது தீபம் ஏற்றவேண்டும். இந்நாட்களையே தலைநாட்கள் என்பர். இன்றைய நாட்களில் பொதுவாக இந்நாட்களையே கொண்டாடுகின்றனர். கார்த்திகை தீபத்தை 'வீட்டு தீபம்' 'மலை தீபம்' என்று பிரித்து அதற்கு ஏற்ப வீட்டிலும், மலையிலும் விளக்கு ஏற்றுவர். பண்டைய தமிழர்களும் வீட்டின் முற்றத்தில் மட்டும் இன்றி மலை மேலும் விளக்கு ஏற்றினர் என்பதனை சீவகசிந்தாமணியில் 256 வது பாடல்

.......... ....... குன்றிற்
கார்த்திகை விளக்கிட் டன்ன கடிகமழ்
குவளைப் பைந்தார்''

என்று கூறுகிறது.

விளக்கேற்றுவதன் தத்துவமாவது: அகல், எண்ணெய், திரி இம்மூன்றும் ஒன்று சேர்ந்தால் இன்பமான ஒளி (ஜோதி) உண்டாகும். அதுபோன்று மனமான அகலில், பக்தி என்னும் எண்ணெய் ஊற்றி நல்லொழுக்கம் என்ற திரியிட்டால் ஜோதி என்னும் "முக்தி" அடையலாம் என்பதே பொருள் ஆகும்.

புறத்தின் இருளை அகற்றும் விளக்கைபோல் நமது அக இருளை அகற்ற இறைவனை வேண்டி அனைவரும் "கார்த்திகை தீபம்" ஏற்றிக் கொண்டாடுவோம். ★

(28-ம் பக்கத் தொடர்ச்சி)

**நகராத ஊர்வலம் :**

தியாகராஜர் ஒரு சித்திரை திருவிழாவின்போது ஸ்ரீ ரங்கநாதரின் ரதோஸ்தவம் காண ஸ்ரீ ரங்கம் சென்று தெற்கு சித்திரை வீதியில் உள்ள ஒரு வீட்டில் தங்கியிருந்தார். குதிரை வாகனத்தில் இரவு ஸ்ரீ ரங்கநாதன் வலம் வரும்போது வீட்டு வாசலில் நின்று தூரத்திலே ஸ்ரீரங்கனின் அழகை கண்டு 'ராஜுவெடலெ' (தோடி) கீர்த்தனையில் பாடினார். வைபோகத்துடன் எழுந்தருளும் ரங்கனைத் தரிசிக்க ஓடிவரும்போது ஜன நெரிசல் காரணமாக அவரால் தரிசனம் செய்ய முடியாமல் நின்றுவிட்டார். மூலையில் வந்த ஊர்வலமும் நின்றுவிட்டது. எவ்வளவு தூக்கியும் ப்ரபந்தம் பாடியும் வாகனத்தை நகர்த்த முடியவில்லை. அப்போது ஒரு கோயில் அர்ச்சகர் மீது சாந்நித்யம் ஏற்பட்டு 'அந்த பக்தனை இங்கு அழைத்து வாருங்கள்' என்று வாக்கு ஆவேசத்தில் சொல்லப்பட்டது. உடனே அங்குள்ளவர்கள் விஷயமறிந்து ஓடி வந்து தியாகராஜரை அழைத்து ஸ்வாமியின் முன் தரிசனம் செய்வித்தனர். தியாகராஜர் ஆனந்தத்தால் பக்தி பரவசப்பட்டு 'வினராதனு' என்ற பாடலை மனமுருகப் பாடியதும் ஊர்வலம் நடந்தது. பிறகு தியாகராஜர் ஸ்ரீ ரங்கம் கோவிலுக்குச் சென்று மூலவரை முத்தங்கி சேவையுடன் தரிசித்து ஸ்ரீரங்கநாதன் மீது ஜீதாமுராரே (ஆரபி) 'கருணஜூப வய்ய' (சாரங்கா) என்ற 'ஸ்ரீ ரங்க பஞ்ச ரத்னம்' கீர்த்தனைகளைப் பாடினார். இவ்வாறு ஸ்வாமிகளின் சங்கீத திறமையும், பக்தியின் மேன்மையும் நாடெங்கும் பரவிப் பல நாட்டவர் வந்து ஸ்வாமிகளைத் தரிசித்துச் சென்றனர்.

**இசை உறங்கியது :**

தியாகராஜரின் பக்தி, ஞானம், ஸங்கீத சாஸ்திரத் திறமையை கண்டு பெரியோர்களும், சிஷ்யர்களும் அவரை வால்மீகியின் அம்சமே என்று கொண்டாடினார்கள். மற்ற ராமாயணங்களில் சொல்லப்படாத கருத்துக்களும் நிகழ்ச்சிகளும் தியாகராஜர் கீர்த்தனையில் காண்கிறோம்; 'வாசாமே கோசரமே, மனஸா' 'ஹரி நேனெந்து வெதகுதுரா', 'களல நேர்ச்சின', 'வினஸை கொனியுன்னுரா' முதலிய கீர்த்தனைகளின் மூலம் தியாகராஜர் வால்மீகி அம்சம் என்பது தெளிவாகிறது.

ஸ்வாமிகளுக்கு பூலோக வாழ்க்கையில் பற்று குறைந்து இன்னும் எவ்வளவு நாள் பூபாரத்தை தாங்க வேண்டும் என்று ஈசனிடம் முறையிட்டார். ஒரு நாள் ராமபிரான் அவர்முன் தோன்றி "தியாகராஜா! இன்றிலிருந்து 10வது மாதத்தில் உனது பூலோக வாழ்க்கை முடியும். ஆனால் மறு ஜன்ம எடுத்தே நம்மையடையக்கூடும்' என்றுகூறி மறைந்தார். ஸ்வாமிகள் மறு பிறவியை நினைத்து மனம் வருந்தி 'ஞான மொஸக ராதா, இதிசமயமுரா, க்ருபஜூடகுவேள, க்ஷீணமைதிருக, (முகாரி) முதலிய கீர்த்தனைகளைப் பாடினார். 9 மாதங்கள் 20 நாட்கள் கழிந்து 10 நாட்கள் இருக்கும்போது ராமபிரான் தியாகராஜருக்கு அனுக்கிரஹம் செய்ய மனமிரங்கி அவர் முன் மறுபடியும் தோன்றி 'அன்பனே! நீ மகா பக்தன்! உனக்கு இனி வேறு ஜன்மம் கிடையாது. இன்றே சன்னியாசம் வாங்கிக் கொள். சந்நியாசாச்ரமம் ஒரு ஜன்மமாகி விடுகிறது. இன்றைக்குப் பத்தாவது நாள் என்னை அடைவாய்' என்றுகூறி மறைந்தார். தியாகராஜர் பேரானந்தம் அடைந்து, 'கிரிபை நெல' (ஸஹானா) என்னும் கீர்த்தனைப் பாடித் துதித்து அன்றே பல பாகவதர்கள், பண்டிதர்கள் முன்னிலையில் 'சந்நியாச்சிரமம்' பெற்றார். மறு நாள் ஏகாதசி பஜனையின்போது தமது சிஷ்யர்களுக்கும் பக்தர்கட்கும் உபதேசம் செய்தார். "ஸ்ரீராம பஜனையை இடைவிடாது செய்யுங்கள். ராம நாம தாரக மந்திரமே உங்களையெல்லாம் இவ்வுலக மாயையிலிருந்து வழிகாட்டி பிறவிப்பிணி அகற்றி கரையேற்றக் கூடியது. அடுத்த பஞ்சமியன்று நான் இப்பூத வுடலை விட்டுவிட, ஸ்ரீராமன் அக்ஞை' என்று கூறினர். அன்றைய பஜனையில் 'பரமாதமுடு', 'பரிதாபமு' என்ற இரண்டு புதிய கீர்த்தனைகளைப் பாடினார்.

குறித்த நாளான பிரபவ வருஷம் தை மாதத்து பகுள பஞ்சமி தினம் (6-1-1847) வந்தது. அன்று சிஷ்யர்கள், பக்தர்கள், வைதீகர்கள் மற்றும் பெரியோர்களும் இஷ்டமித்திர பந்துக்களும் கூடி வேத கோஷம் செய்து கொண்டிருந்தபோது ஸ்ரீதியாக ராஜ ஸ்வாமிகள் ஸ்ரீராமனே தன் இஷ்ட தெய்வம் அவனிடம்தான் ஐக்கியம் என்று குறிப்பிட்ட 'ச்யாம சுந்தராங்க' கீர்த்தனையை பாடினார். பகல் 12 மணிக்கு எல்லோரையும் பார்த்து ஸ்வாமிகள் "அன்பர்களே! ஸங்கீத சாஸ்திரத்தை எவ்வளவு இடையூறுகள் வந்தாலும் சலிப்பின்றி பிரகாசப் படுத்துங்கள். ஸதா ஸ்ரீராமனையே துதியுங்கள்! இதுவே எனது கடைசி விருப்பம்' என்றுகூறி ராமசந்திர மூர்த்திக்கு தீபாராதனை செய்து யோக சமாதியில் அமர்ந்தார். ஒரு வஸ்திரத்தினால் தலையை மறைத்து கொண்டார். யாவரும் ராம நாமம் ஜபிக்க எல்லோரும் ஸ்வாமிகளின் சிரசிலிருந்து ஓர் நாதத்தை கேட்டனர். கபாலத்திலிருந்து ஸ்வாமிகள் ஜீவன் ஜோதி ஸ்வரூபமாகி மேலே கிளம்பி வடதிசை நோக்கி ஸ்ரீராமன்பாதத்தில் ஐக்கியமாயிற்று. அனைவரும் ஆனந்த கண்ணீர் பெருக அருகில் சென்று பார்த்தபோது வெற்றுடம்பு தானிருந்தது. அப்புண்ணிய சரீரத்தை மங்கள வாத்தியங்களும் சங்கீதமும் பஜனைகளும் வேதமும் கோஷிக்க ஸ்வாமிகள் முன்னமே சொல்லியிருந்தபடி அவர் குருவான ஸொண்டி வெங்கடரமணய்யா அடக்கமான இடத்தினருகில் அடக்கம் செய்து, சமாதி ஏற்படுத்தி, அபிஷேகம் முதலியன செய்து அதன் மேல் துளசி செடிகளைப் பயிராக்கி 'பிருந்தாவன' முண்டாக்கினார்கள். இன்றும் ஒவ்வொரு வருடம் இந்த நாளில் 'தியாராஜ உத்ஸவம்' கொண்டாடுகிறார்கள்.

தியாகராஜர் போன்ற மகான்கள் வைத்து போயிருக்கும் பொக்கிஷங்களால்தான் நமது பாரத பூமி புண்ணிய பூமியாக தலை நிமிர்ந்து நிற்கிறது. அவரது கருத்துக்களை உபநிஷத வாக்கியங்களாகக் கொண்டு ஸ்ரீராமனை நாம் அனைவரும் தியானிக்க வேண்டும். எதுவரினும், இன்றோ, நாளையோ, அப்புறமோ கடவுள் அனுக்கிரஹம் உண்டு என்ற திட சித்தம் கொண்டு அன்பும் சத்யமும் பக்தியும் கொண்டு வாழ்க்கை நடத்தி பாரதத்திற்கு மேலும் பெருமை சேர்ப்போமாக!! ★

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

